# முன்னுரை

கலையின் பயன் இரண்டு. ஒன்று, காலத்தை இன்பமாகக் கழிக்கச் செய்வது. மற்றொன்று, நம்மை அறியாமல் வாழ்க்கையைத் திருத்தி உயர்த்துவது. இந்த இரண்டும் ஒரு சேர அமையும் சிறப்பு, சிறுகதைகளில் மிகுதியாகக் காணலாம். அதனால்தான் சிறுகதை இலக்கியம் உலகமெல்லாம் செழித்து வளர்ந்துவருகின்றது.

இந்த நூல் யான் அவ்வப்போது எழுதிவந்த சில சிறுகதைகளின் தொகுதியாகும். இவற்றுள் சில முன்னமே சில இதழ்களில் வெளிவந்தவை. அவற்றின் ஆசிரியர்களுக்கு என் நன்றி உரியதாகும்.

மு. வ.

# விடுதலையா?

காலை எட்டு மணிக்கு முன்னமே தலைமையாசிரியர் வந்து பள்ளிக்கூட வாயிலில் நின்றுகொண்டிருந்தார். வேலையாட்கள் அவருக்குமுன்னே வந்து காகிதத் துண்டெல்லாம் பொறுக்கித் தூசெல்லாம் துடைத்துக்கொண்டிருந்தார்கள். சிவப்புக் காகிதமும் நீலக் காகிதமும் கத்தரித்துச் செய்த காகிதத் தோரணங்களைத் தலைமையாசிரியர் வேலையாட்களின் உதவி கொண்டு கட்ட முயன்றார். அதற்குள் பள்ளிக்கூடச் சிறுவர்களில் பெரியவர்கள் — வளர்ந்த பிள்ளைகள் சிலர் – முன்வந்து வேலையாட்களின் கையிலிருந்து அந்தத் தோரணங்களை வாங்கிக்கொண்டார்கள். தங்கள் கை உழைப்பால் கத்தரித்து ஒட்டிச் செய்த விலைமதிப்பற்ற அந்தத் தோரணங்களைத் தங்கள் கையாலேயே கட்ட வேண்டும் என்பது அந்தப் பெருஞ் சிறுவர்களின் ஆவல். "பள்ளிக்கூட வேலையில் இவ்வளவு அக்கரை! படிப்பில் இவ்வளவு அக்கரை இல்லையே!" என்று தலைமையாசிரியர் முணுமுணுத்தார். சிறுவர்கள் இதைக் கேட்டதும் திரும்பித் திரும்பி அவருடைய முகத்தைக் கண்டு புன்முறுவலை உணர்ந்து ஊக்கமே கொண்டார்கள். "இன்றைக்குக் கூடவா படிப்பு!" என்று ஒருவன் அவருடைய செவியில் விழுமாறு சொல்லிவிட்டுத் தலைகுனிந்தான்.

தலைமையாசிரியர் அன்று அழகாக உடுத்திருந்தார். சலவை செய்த கருப்புக் கோட்டு அவருக்கு நல்ல தோற்றத்தைக் கொடுத்தது. தூய்மையான வெள்ளாடையைக் கீழ்ப் பாய்ச்சாகக் கட்டியிருந்தார். அவருடைய தலைப்பாகையும்

புதிதாக இருந்தது. அதன் ஓரங்களில் அழுக்குக் கரை அமையவில்லை. இன்னும் இரண்டு வார காலம் அவருடைய தலைமேலிருந்து வியர்வை ஊறினால்தான் அந்த அழுக்கு ஓரங்களில் கரைபோல் அமையும்.

அவருடைய கையில் இருந்த பிரம்பில் மட்டும் புதுமைத் தோற்றம் இல்லை. அது ஒடிந்து மொக்கையாய் நின்ற பழைய பிரம்பே. அதற்கு ஒன்றும வேலை இல்லாமையால், கோட்டுக்கும் தலைப்பாகைக்கும் வந்த வாழ்வு அதற்கு வரவில்லை. மற்ற நாட்களில் பள்ளிக்கூட ஒழுங்கு முறைக்குக் காரணமாக இருந்த அந்தப் பிரம்பு இன்று ஒருநாள் மட்டும் கோட்டுக்கும் தலைப்பாகைக்கும் செல்வாக்கைக் கொடுத்துவிட்டுத் தான் இருக்குமிடம் தெரியாமல் இருந்தது. அந்த ஊர் நகராண்மைக் கழகத்தின் பழைய தலைவர் தேர்தலில் தோற்றுவிட்ட மறுநாள் மானம் காத்து மறைந்து வாழ்ந்ததுபோல் அன்று காலையில் அந்தப் பிரம்பு அவர்கையில் இருந்தது. அவர் அந்தப் பிரம்பை ஆட்டவுமில்லை; ஓச்சவுமில்லை. வாளா வைத்திருந்தார். அது அசைவின்றிக் கிடந்தது. ஆனால் அந்தப் பள்ளிக்கூடத்தில் பிரம்பின் பதவிக்குத் தேர்தல் ஒன்று நடந்ததாகவோ, நடந்தாலும் பிரம்புக்குப் போட்டி ஒன்று இருந்ததாகவோ தெரியவில்லை. எப்படியோ, பிரம்பு செல்வாக்கு இழந்திருந்தது.

பிரம்பின் செல்வாக்கற்ற நிலைக்காகச் சிறுவர்கள் ஒருவரும் வருந்தியதாகத் தெரியவில்லை. ஐந்து வயது முதல் பன்னிரண்டு வயது வரையில் உள்ள சிறுவர்களே அந்தப் பள்ளிக்கூடத்தில் படிப்பவர்கள். அது தொடக்கப் பள்ளிக்கூடமாதலால், காலை எட்டரை மணி முதல் பதினொன்றரை மணி வரையில் வந்துகொண்டிருந்தார்கள். ஆனால் அன்று காலைமட்டும் எட்டேகால் மணிக்கெல்லாம் சிறுவர்கள் பெரும்பாலோர் வந்து திரண்டுவிட்டார்கள். பள்ளிக்கூடம் திறந்

திருந்தும் அதனுள்ளே புகாமல் வெளியே விளையாடு மிடத்தில் நின்று ஆடியும் ஓடியும் துள்ளிக்கொண்டிருந் தார்கள் அந்த இளங்கன்றுகள். தலைமையாசிரியர் அத் தனைக்கும் இடங்கொடுத்தார். அவர் அவ்வாறு பொறுமை யாக விட்டுவிட்டதைக் கண்ட மற்ற ஆசிரியர்களும் இடங் கொடுத்தார்கள். அவர்களுடைய மகிழ்ச்சிப் பெருக்கு மலர்முகத்தில் நகையொளியாய் வீசிற்று. மாசற்ற இளங் குமுத வாய்கள் – பொய்யறியாத திருவாயகள் – குறுநகை அரும்பிப் பெருநகையாய் மலர்ந்தன. அந்தத் திருவாய் மலர்களில் வெண்முத்துக்களாய்த் தூய பற்கள் ஒளிவீசின. இந்த அழகொளியே அந்தக் காலைப்பொழுதில் முத்துக் காரத் தெருவைச் சிறபபித்தது.

“டேட, இன்றைக்கு இன்ஸ்பெக்டர்தானே வருகிறார் ?” என்று கேட்டான் ஒருவன்.

“போடா, போ, இன்ஸ்பெக்டர் வந்தால் காகிதத் தோரணம் கட்டுவார்களா ?” என்றான் மற்றொருவன்.

“நேற்று ஆசிரியர் சொன்னாரே, கேட்கவில்லையா ?” என்றான் ஒரு சிறுவன்.

“இன்றைக்குச் சுகாதாரக் கொண்டாட்டம் ; எனக்குத் தெரியும்” என்றான மூன்றாம வகுப்புச் சிறுவன் ஒருவன்.

“சுகாதாரம் என்றால் என்ன ? யானையா ? அது எங்கே இருக்கிறது ?” என்று கேட்டான் முதல் வகுப்பில் படிக்கும் சிறுவன் ஒருவன்.

அவன் கேட்ட கேள்வியைப் பற்றிப் பக்கத்தே இருந்த சிறுவர்கள் சொல்லிச் சொல்லிச் சிரிக்க, அது அப்படியே எல்லாச் சிறுவர்களுக்கும் எட்டித் தலைமையாசிரியர்க்கும் எட்டியது. அவரும தம்மை மறந்து சிரித்தார். அந்தச்

சிறுவனை அழைத்துவரும்படி ஏவினார். சிறுவன் நடுநடுங்கிக்கொண்டே வந்து நின்றான்.

“உன் பெயர் என்ன?” என்றார் தலைமையாசிரியர்.

“திருவேங்கடம்” என்று அஞ்சி நின்றான் சிறுவன்.

அவனை அந்த நிலையிலேயே விட்டால் கண்ணீர் கலங்கி அழுதுவிடுவான் போலத் தோன்றியது. அதை உணர்ந்த தலைமையாசிரியர் புன்சிரிப்போடு முதுகில் தட்டிக் கொடுத்து “நீ இதுவரையிலும் யானையைப் பார்த்ததில்லையா? உனக்குக் காட்டுவேன். யானை, பூனை எல்லாம் பார்க்கலாம்” என்று தேறுதல் சொல்லி அனுப்பிவிட்டார்.

அருகே இருந்த மற்றொரு சிறுவனைப் பார்த்துத் தலைமையாசிரியர், அவனுடைய அழுக்கடைந்த ஆடையைக் காட்டி, “இப்படி யாராவது வந்தால் இங்கே சேர்க்கமாட்டேன். இரண்டு மணிக்குப் பள்ளிக்கூடம் வரும்போது எல்லாரும் புதுச்சொக்காய் போட்டுக்கொண்டு தலைக்குக் குல்லாய் போட்டுக்கொண்டு ஒழுங்காக வர வேண்டும். தவறிக் கந்தலும் அழுக்குமாக வந்தால் வெளியே நிறுத்தி விடுவேன். கொண்டாட்டத்திற்குச் சேர்த்துக்கொள்ள மாட்டேன். தெரியுமா?” என்று ஒரு கனைப்புக் கனைத்தார்.

“சார், இவனும் அழுக்குத்துணி போட்டுக்கொண்டு வந்திருக்கிறான்” என்று ஒருவனை இரண்டு மூன்று சிறுவர்கள் தளளிக்கொண்டு போய்த் தலைமையாசிரியரிடம் நிறுத்தினார்கள்.

“நீ என்ன சின்ன பையனா? இப்போதுதான் பள்ளிக்கூடத்தில் வந்து சேர்ந்தாயா? இப்படி வரலாமா? மூன்றாவது படிக்கிறாய், அறிவு இல்லை?” என்றார் தலைமையாசிரியர்.

" நேற்று நீங்கள் சொன்னபோது நான் இல்லை. எனக்குத் தெரியாது " என்றான் அவன்.

" நேற்று ஏன் பள்ளிக்கூடத்திற்கு வரவில்லை ?"

" வந்திருந்தேன். மூன்று மணிக்குத் தண்ணீர் குடிக்கக் கேட்டுக்கொண்டு வீட்டிற்குப் போய்விட்டேன். அதனால் தான்—"

" அப்புறம் தெருவில் மற்றப் பிள்ளைகளைக் கேட்டுத் தெரிந்துகொள்ளக் கூடாதா ? நீ சோம்பேறி."

" மற்றப் பையன்கள் யாரும் என்னோடு பேசுவது இல்லை."

" நீ சண்டைக்காரன் என்று தெரிகிறது " என்று தலைமையாசிரியர் கடுகடுத்தார்.

" வீட்டுக்குப் போய்ப் புதுச்சொக்காய் போட்டுக் கொண்டு வந்திடுவேன் " என்று அவன போக விடை கேட்டான்.

" அவன் போனால் இப்போது வரமாட்டான். அடிக்கடி தண்ணீர் வேண்டும் என்று கேட்டுக்கொண்டு வெளியே போய் எங்கேயாவது திரிந்துகொண்டிருப்பான். இர்ரெகுலர் பாய் (Irregular boy) " என்று மற்றோர் ஆசிரியர் எடுத்துரைத்தார்.

" ஒழியட்டும், எப்படியாவது போகட்டும். இன்றைக்கு ஒருநாளாவது ஒழுங்காக வரக்கூடாதா ?" என்று தலைமை யாசிரியர் சொல்லிவிட்டு மணியடிக்கச் செய்தார் மணி அடித்தது. சிறுவர்கள் வகுப்பு நோக்கி ஓடத் தொடங்கினார்கள். அவர்களை ஓடாதவாறு நிறுத்தி, " மறுபடியும் சொல்கிறேன். இரண்டு மணிக்குப் பள்ளிக்கூடம் வரும்

போது, எல்லாரும் அரையணு எடுத்துக்கொண்டு வர வேண்டும். அரையணு இல்லாதவர்களுக்குக் கொடி கிடைக்காது. அந்தக் கொடி வாங்கிச் சொக்காயில் குத்திக்கொண்டால்தான் கொண்டாட்டத்தில் சேரலாம். ஒரு கொடி அரையணு " என்று சொல்லித் தம்முடைய கோட்டில் குத்திக் கொண்டிருந்த கொடியைக் காட்டினர். சிறுவர்கள வகுப்புகளில் போய் நின்றார்கள். கடவுள் வாழ்த்துப் பாட்டு முழங்கியது ; கடலொலி போல் குழப்பமாய்க் கேட்டது.

" நம்முடைய தேசத்திற்கு என்ன பெயர் ? இந்தியா என்று நேற்றுச் சொன்னேன் அல்லவா ?" எனத் தலைமையாசிரியர் குரல் கேட்டது. " ஒரு வியாபாரி 800 தேங்காய் வாங்கி—" என்று மற்ருேர் ஆசிரியர் கணக்குக் கொடுக்கலாஞர். " நன்றி ஒருவர்க்குச் செய்தக்கால் அந்நன்றி " என்று ஒரு வகுப்பில் சிறுவன் ஒருவன் பாட்டு ஒப்புவிக்கத் தொடங்கினன். " கண்ணன் தின்னும் பண்டம் வெண்ணெய் " என்ற ஒலி மற்ருெரு வகுப்பில் கேட்டது. வெளியே, " நேரமாய்விட்டது. நல்ல அடி விழும் " என்று சொல்லிக்கொண்டே சிறுவர் இருவர் பள்ளிக்கூடத்தை நோக்கி ஓடிவந்தார்கள்.

மாலை மூன்று மணிக்குப் பள்ளிக்கூடத்தை அடுத்த வெட்டவெளி பெரும் பொலிவு பெற்றிருந்தது. ஐந்து வகுப்புகளும் ஐந்து அணியாக நிற்க, ஐந்து ஆசிரியர்கள் அவற்றின்முன் நின்றுகொண்டிருந்தார்கள். மாலை வேளையில் கூரை முகப்பில் அணிவகுத்து அமர்ந்து 'கா' என்ற நெட்டெழுத்தையே பல நூற்றுண்டுகளாகக் கற்று வரும் காக்கைப் பளளிக்கூடமும் இன்று அழகில் தோற்று விட்டது எனலாம். சிறுவர்கள் ஐந்து ஐந்து பேராகப் பிரிக்கப்பட்டுப் பெரிய பையன் ஒருவனிடம் ஒப்படைக்கப்பட்டார்கள். அந்தப் பெரிய பையன் கையாம். அவனிடம்

ஒப்படைக்கப்பட்ட ஐவரும் ஐந்து விரல்களாம். அவனுக்கு அந்த ஐவர் பெயரும் தெரியவேண்டுமாம்.

| | |
|---|---|
| சுண்டு விரல்— | திருமால் |
| மோதிர விரல்— | முருகேசன் |
| நடு விரல்— | பார்த்தசாரதி |
| சுட்டு விரல்— | வேலப்பன் |
| கட்டை விரல்— | அப்துல் ரசாக் |

என்று இப்படி ஒருவன் கைவிரல் விட்டு விட்டு மனப்பாடம் செய்துகொண்டிருந்தான். எல்லாருடைய தலையிலும் குல்லாய்கள் பல நிறமாய் அழகு செய்தன. சரிகைக் குல்லாய்கள் சில, துருக்கிக் குல்லாய்கள் சில, குரங்குக் குல்லாய்கள் சில. வெள்ளை சில, நீலம் சில, கருப்புப் பல, சிவப்புப் பல. கோட்டும் கால்சட்டையும் அணிந்தவர்கள் சிலர் ; சொக்காயும் துண்டும அணிந்தவர்கள பலர் ; பட்டாடையும் பளபளப்புமாய் விளங்கியவர்கள் சிலர் ; பருத்தியாடையும் பாங்குமாய் விளங்கியவர்கள் சிலர். காகிதக் கொடிகள் குண்டூசிகளால் குத்தப்பெற்றுச் சிறுவர்களின் சொக்காயிலும் கோட்டிலும் விளங்கின.

ஒரே நிறமான உடைமட்டும் அவர்களுக்குத் தந்து உடுக்கச் செய்திருந்தால் ஏதோ ஒரு புதிய படையெடுப்பு என்று சொல்லத்தக்க பெருமை பெற்றிருக்கும் அந்தச் சிறுவர் அணிவகுத்த அழகு. அவர்களிடம் காணப்பட்ட பெரிய மாறுதல் ஒன்று ; அதாவது அவர்கள் கையில் பலகையும் புத்தகமும் இல்லை ; சிலர்கை வெறுங்கையாக இருந்தன ; சிலர்கைகள் கைக்குட்டையுடன் அசைந்தன. சிலர்கைகள் குண்டூசியையும் கொடியையும் தடவிக்கொண்டிருந்தன. சிலர்கைகள் குல்லாயின் சரிகைக்கரையையோ மெத்தென்ற

மேற்புறத்தையோ தடவிக்கொண்டிருந்தன. சிலர்கைகள் பொத்தான் பொருத்தத் தெரியாமல் அலைந்துகொண்டிருந்தன. சிலர்கைகள் ஆடையின் சரிகைக் கரையை நேரே நீட்டி ஒழுங்குபடுத்திக்கொண்டிருந்தன. சிலருடைய கைகளோ முன்னே இருந்த சிறுவர்களின் குல்லாயில் காகிதத் துண்டுகளை அவர்கள் அறியாமல் செருகிக்கொண்டிருந்தன.

"நான் சொல்லுகிற வரைக்கும் இங்கே அங்கே நகரக் கூடாது; நகர்ந்தால் நாளைக்குப் பள்ளிக்கூடம் வந்தால் பழுக்கப் பார்த்துக்கொள்வேன். இன்றைக்கு இனிப்புப் பொட்டலமும் கிடைக்காது. நகர்ந்தால் வெளியே போகவும் முடியாது; போலீசார் சுற்றிலும் காவல் இருப்பார்கள். தெரியுமா? தண்ணீர் வேண்டுமானால் இப்போதே கேட்கவும்; அப்புறம் கிடைக்காது. ஒன்றுக்கும் இப்போதே கேட்டுக்கொண்டு போய்வரலாம். கலெக்டர் ஆபீசின் எதிரே போய்ச் சேர்ந்ததும் ஒருத்தனும் வாலாட்டக் கூடாது. நல்ல பிள்ளைகள் என்று பெயரெடுக்கவேண்டும். தெரியுமா?" என்று தலைமையாசிரியர் நீண்ட உபதேசம் செய்தார்.

அப்போது முதிய அம்மையார் ஒருவர் தம் பேரனை அழைத்துக்கொண்டு அணிவகுப்பில் நுழைந்தார். அம்மையார்க்கு நரை வந்துவிட்டதே அல்லாமல் இன்னும் திரை வரவில்லை. மூப்பு என்று சொல்லிவிட இயலாது. ஆனாலும் அவர்நிலையினைக் கூற வேறு சொல் இல்லையாகையால் மூப்பின் தொடக்கம் எனலாம். வயது ஐம்பதுக்கு மேற்பட்டிருக்கலாம். சிவந்த மேனியும், கட்டுத் தளரா யாக்கையும், எளிய உடையும் ஒருவகை வீறு அளித்தன. கண்களின் கலக்கமற்ற ஒளி, உள்ளத்தின் தெளிவை வெளியாக்கிற்று. நடையில் பெண்மையும் வீரமும் ஒருங்கே குடிகொண்டிருந்தன. பிரான்சு நாட்டில் வாழ்ந்து வீரப்போர்

புரிந்து தீக்கு இரையாகிய ஜோன் என்னும் அம்மையார் இன்னும் 30 ஆண்டுகள் உயிர் வாழ்ந்திருந்தால், அவரை இந்த அம்மையாருக்கு உவமையாக்கிக் கூறலாம். ஜோன் ஒரு நாட்டைக் காக்க வாழ்ந்தவர். நரசம்மாள் என்னும் இந்த அம்மையாரோ ஒரு பேரனைக் காக்க வாழ்ந்தவர்.

பேரனைக் கையில் பிடித்துக்கொண்டே தலைமையாசிரியரிடம் நேரே சென்று, “ வாத்தியாரே ! எங்கள் பையனும் உங்களோடு வர வேண்டும் என்று பிடிவாதம் செய்கிறான். இன்றைக்கு ஏதோ கொண்டாட்டமாமே. பையனை மறுபடியும் வீட்டுக்குக் கொண்டுவந்து சேர்க்க வேண்டும். அவன் குழந்தை ; ஒன்றும் அறியாதவன். மற்றப் பிள்ளைகளைப் போல் வெளியே போய்ப் பழக்கப்படாதவன். பையனைப் பார்த்துக்கொள்ளுங்கள். வீடு வந்து சேரும் வரை உங்கள் பொறுப்பு. அப்படியானால் அழைத்துக்கொண்டு போகலாம். இல்லையானால் வேண்டாம் ” என்றார்.

தலைமையாசிரியரோ இந்தத் துறையில் பழக்கமுள்ளவர். எவ்வளவோ பெற்றோருக்கு உறுதியும் தேறுதலும் சொல்லிச் சொல்லி, வீடு சுற்றி வளர்ந்த சிறுவர்களை நாடு தெரியச் செய்தவர். “ பெரியம்மா ! எங்கேயும் வெளியூருக்கோ காட்டுக்கோ நாட்டுக்கோ போகவில்லை. ஆலங்காயம் சாலைவழியாகப் போய் ஐந்து ராந்தல் கம்பத்தருகே நின்று அங்கிருந்து கலெக்டர் ஆபீசுக்கு எதிரே போய் இருப்போம். இருநூறு பிள்ளைகள் வருகிறார்கள். பையனோடு பையனாய் வரட்டும். நாங்கள் பார்த்துக்கொள்வோம் ” என்று மென்மையும் இனிமையும் ததும்ப மொழிந்தார்.

“ மற்ற வீட்டுப் பிள்ளைகள் வேறே. எங்கள் பையன் வேறே. இவனுக்கு எங்களை விட்டுப் பழக்கம இல்லை. உங்கள் கையிலே வைத்துப் பார்த்துக்கொள்வதாக இருந்

தால் அனுப்புகிறேன். இந்தாங்க ஓர் அணா. கொடியோ என்னவோ வேண்டுமாம். பார்த்துக்கொள்ளுங்கள் " என்று அந்தப் பாட்டியார் சொல்லிவிட்டு வீடு நோக்கி அடி எடுத்து வைத்தார். திரும்பித் திரும்பிப் பேரனையும் மற்றப் பிள்ளைகளையும் பார்த்துக்கொண்டே சிறிது நடந்தார். திரும்பிப் பேரனிடம் வந்து, " அப்பா, திருவேங்கடம்! பத்திரமாய், வாத்தியார் பக்கத்திலேயே இரு. வாத்தியார் வரும போது வா. இங்கே அங்கே வேடிக்கை பார்த்துக்கொண்டு எங்கேயாவது போய்விடாதே. பொழுது போவதற்குள் வந்துவிடு. நான் வரட்டுமா ? பத்திரம், பத்திரம " என்று சொல்லிவிட்டுச் சென்றார். பூனை குறுக்கே வராமையாலும், காலைக் கல் தடுக்காமையாலும் ஒன்றும் ஐயுறாமல், " பையன் வந்திடுவான் " என நம்பியது அந்தப் பேதை மனம்.

திருவேங்கடத்தின் வெல்வெட்டுக் கோட்டுக்குப் பச்சை நிறக் கொடி வந்து பொருந்தியது. அவனுடைய சரிகைக் குல்லாய் குடுமியை உள்ளே அடக்கிக்கொள்ளாமல் வெளியே தெரியவிட்டது. அரையில் கட்டிய வெள்ளாடையின் சரிகைக்கரை, குல்லாய்க்குப் போட்டியாக விளங்கியது. இடுப்பில் நிற்காத அந்த ஆடையை அடிக்கடி இழுத்துக் கட்டும் தொல்லையைப் போக்கப் பாட்டியார் கட்டிய கச்சு, பேரனுடைய வயிற்றை இறுக்கியது. ஆறு வயதுள்ள சிறுவன் கொண்டாட்டத்தில் கலந்துகொள்வது இவ்வளவு திண்டாட்டமாக இருந்தது.

நாற்பது ஆண்டுகளுக்குமுன் சிறுவர் உலகம் இப்படி இருந்தது. வீட்டை விட்டுப் பெற்றோர் அனுப்புவதும் அருமை ; பெற்றோர் அனுப்பினாலும் சிறுவர் துணிந்து திரிவதும் அருமை. இந்தக் காலத்திலோ, அந்த வயது சைக்கில் உருட்டிக் கற்கும் வயதாகும். ஆடை வகையிலும் இப்போது அவ்வளவு தொல்லை இல்லை. அரைக்கால்சட்டை

அணியாத சிறுவனை இப்போது நாட்டுப்புறத்திலும் காண்பது அரிது. குடுமியும் குல்லாயும், இந்தக் காலத்துச் சிறுவர்கள் "பைத்தியக்காரன்" "பட்டிக்காட்டான்" என்று எள்ளி நகையாடும் கோலங்கள். ஆசிரியர் கையைப் பிடித்துக்கொண்டு கொண்டாட்டத்துக்குச் செல்லும் சிறுவர்கள் இந்தக் காலத்திலே வெறுங் கற்பனை. ஆசிரியர்களின் துணையும் தூண்டுகோலும் இல்லாமலேயே இந்தக் காலத்துச் சிறுவர்கள் ஊர்க்கொண்டாட்டங்கள் எல்லாவற்றிலும் சென்று அங்கே அமைத்துள்ள நாற்காலிகளையெல்லாம் நிரப்பி, கொண்டாட்டத்திற்கு வரும் பெரியவர்களுக்கு இடமில்லாமல் திகைக்கச் செய்கிறார்கள். இது உலக முன்னேற்றத்தின் விளைவு.

ஆனால் திருவேங்கடம் வளர்ந்த குடும்பம் வேறு; வாழ்ந்த காலமும் வேறு. இவன் மூன்று குடும்பங்களுக்கு ஒரு மகனாய்-ஆண் குழந்தையாய்-வளர்ந்துவந்தான். இவனுடைய பெரியப்பனுக்கு மகனாய் இருந்தவன் இறந்துவிட்டான. எனவே அந்தக் குடும்பத்திலும் ஆண் மகன் இல்லை. இவனுடைய தாய் தந்தையர்க்கோ இவன் ஒருவனே ஆண் குழந்தை. இவனுக்கு முன் பிறந்த இருவரும் பெண்கள். இவனுடைய தாயைப் பெற்ற குடும்பத்திலே ஆண் பிறக்கவே இல்லை. பிறந்த ஒரு குழந்தையும் பெண். அதுவே இவனுடைய தாயாக வளர்ந்த அம்மையார். அந்த ஒரு பெண் குழந்தையின் தாயே இவனை அழைத்து வந்து தலைமையாசிரியரிடம் விட்ட பாட்டியார். தம்முடைய மகள் வயிற்றில் ஒருமகன் பிறக்கவேண்டுமென்று அந்தப் பாட்டியார் தவம் கிடந்தார். தாம் பிறந்த காஞ்சி நகரில் கோயில் கொண்டிருந்த திருமாலைப் பலகாலும் வேண்டிவந்தார். ஒரு முறை இந்தக் கருத்தோடு திருப்பதிக்குச் சென்று நெடுமாலை நோக்கித் தொழுது வேண்டினார். பிள்ளைவரம்

கேட்போர் செய்யும் சடங்கைப் பின்பற்றி அந்த ஏழுமலையில் ஓர் அடுப்பை மூட்டி வந்தாராம். வேங்கடத்தான் அருள் செய்யப் பிறந்த குழந்தையே திருவேங்கடமாய் இன்று குல்லாயும் சரிகைக்கரை வேட்டியும் அணிந்து சுகாதாரக் கொண்டாட்டத்திற்காகக் கடைத்தெரு வழியாகச் செல்லும் ஊர்வலத்தில் மாணவர் குழுவில் இருந்தவன். அவன்மேல் தலைமையாசிரியருக்கு ஒரு கண் இருந்தேவந்தது.

ஊர்வலம் பாட்டொலியோடு நகர்ந்தது. "செந்தமிழ் நாடு எனும் போதினிலே" என்னும் பாட்டு அந்தக் காலத்துப் பள்ளிக்கூடங்கள் அறியாத ஒன்று. அதைப் பாடிய பாரதியாரும் அந்தக் காலத்து மக்களுக்கு யார் என்று தெரியாது. அரச வாழ்த்துப் பாட்டை ஆசிரியர்கள் கற்றுக் கொடுத்துப் பாடச் செய்தார்கள்; கலெக்டர் ஆபீசின் எதிரே நின்று ஒரு பாட்டுப் பாடி முடித்து மாணவர்கள் உட்கார்ந்தார்கள். அந்தக் கூட்டத்தின் முன் வரிசையில் இருந்தான் திருவேங்கடம்.

குறித்த நேரம் கழிந்ததும் ஒவ்வொருவராகப் பெரியவர்கள் வந்து உட்கார்ந்தார்கள். இசைமுழக்கம் தொடங்கியது. ஆங்கிலேயர்கள் விரும்பும் 'பாண்டு' என்னும் இசையும கலந்தது. கலெக்டர் ஆங்கிலேயர் ஆகையால் அவர் விரும்பும் இசை அங்கு வந்தது. அவர் விரும்பும் ஆங்கில மொழி அந்த இசையைவிட வீறுகொண்டு விளங்கியது. மாலைகள் கழுத்துக்களில் விழுந்தன. விழுந்ததும் கழன்று மேசைகளின்மேல் கிடந்து உறங்கின. கைகள தட்டின. சிலர் எழுந்து பேசினர். ஏ பி சி என்னும் எழுத்துக்களும் அறியாத இளஞ் சிறுவர்கள் பலரை உட்கார வைத்துவிட்டு, திறம்பட எழுதிவந்த ஆங்கில வாக்கியஙகளைச் சிலர் படிக்கத் தொடங்கினார்கள். படித்தபோது, அஞ்சாத மாணவர் சிலர் பேச முயன்றார்கள். அஞ்சி அடங்கிய மாணவர்கள் பலர்

தூங்க முயன்றார்கள். ஆசிரியர்கள் அடிக்கடி தலையிட்ட காரணத்தால் இந்த இருவகை முயற்சியும் பயன்படவில்லை. ஒவ்வொரு முறையும் படித்து முடிந்த பிறகு பெரியவர்கள் வன்மையாகக் கைகளைத் தட்டினார்கள். அப்போது சிறுவர்கள் உண்மையான ஊக்கம்கொண்டு தம் சிறு சிறு கைகளை உரத்தோடு தட்டினார்கள். அவர்கள் அப்படியே தட்டிக்கொண்டு மகிழ்ந்திருப்பார்கள். ஆனால் ஆசிரியர்கள் அதிலும் குறுக்கிட்டுப் "போதும் போதும்" என்று கையமர்த்திக் கத்தியபோது இளைஞர்களின் உள்ளங்கள் திகைப்பு உற்றன. மறுபடியும் கை தட்டும் வாய்ப்பு வருமா என்று காத்திருந்தார்கள் சிறுவர்கள்.

இனிப்புப் பொட்டலம் வரும வரும் என்று சிறுவர்கள் பலரும் காத்திருந்தார்கள். ஆனால் இதுவரையில் ஒன்றும் வரவில்லை. நான்காம் வகுப்பு, ஐந்தாம் வகுப்புச் சிறுவர்கள் ஆசிரியர்களிடம் அஞ்சும் அச்சம் குறைந்தவர்கள். ஆதலால், ஒருசிலர் மெல்ல எழுந்தார்கள்; எழுந்தவர்களில் சிலர் நகர்ந்தார்கள்; இந்தக் காட்சிகளில் திருவேங்கடத்தின் மனம் சென்றது. 'பொழுது போவதற்குள் வந்து சேர வேண்டும்' என்று பாட்டியார் இறுதியில் சொன்ன சொல் அவன் நினைவுக்கு வந்தது. சுற்றிலும் திரும்பித் திரும்பிப் பார்த்தான். பெரியவர்களும் ஒருசிலர் எழுந்து செல்வதைக் கண்டான். அவன்மனமே அல்லாமல் வயிறும் வீட்டை நினைப்பூட்டியது. பகலுணவு உண்ணும்போது கொண்டாட்டத்திற்குப் போகவேண்டும் என்று பாட்டியாரிடத்தில் போராடி வெல்லும் முயற்சியில் வயிற்றை மறந்தான்; கால் வயிறும் உண்ணாமல் கவலையோடு பள்ளிக்கூடம் வந்து சேர்ந்தான்; ஊர்வலத்தில் கலந்து, காணாதன கண்டு, கூட்டத்தில் இருந்து கேளாதன கேட்டு, ஆசிரியர்க்கு அடங்கி எண்ணாதன எண்ணிய அவ

னுக்கு இப்போது வயிறு கிள்ளிற்று. பொழுதோடு போகத் துணிந்த மனத்தின் முயற்சிக்கு வயிறும் துணை செய்தது.

அவன் மெல்ல எழுந்தான். அந்த நேரத்தில் கலெக்டர் மாணவர்களுக்கு அழகான பரிசுகள் வழங்கிக்கொண்டிருந்தார். தலைமையாசிரியரின் நோக்கமும் மற்றவர்களின் பார்வையும் கலெக்டர்மேசையில் இருந்தன. திருவேங்கடம் மெல்ல நடந்து சாலையின் ஓரத்தில் வந்துசேர்ந்தான். இது தான் வந்த வழி என்று தெற்கு நோக்கித் தயங்காமல் நடந்தான்.

ஆறு வயதுள்ள சிறுவனுக்குத் தெற்கு என்றும் கிழக்கு என்றும் வேறுபாடு இல்லை. கிழக்கு மேற்கு என்னும் பகுப்பு அவனுக்குக் கண்மூடி வழக்கமாக – மூட நம்பிக்கையாக இருக்கும். சூரியன் தோன்றுவது கிழக்கு என்று சொல்லிக்கொடுத்து வற்புறுத்தும் வயது அது அல்ல. அப்படி வற்புறுத்தினாலும் சூரியன் மறையும் திசையும் கிழக்குத்தான் என்று அவனுடைய மூளை வற்புறுத்தும். சூரியனை நோக்கி நின்று பார்க்கும்போது இடக்கைப் பக்கம் வடக்கு என்றும் வலக்கைப் பக்கம் தெற்கு என்றும் தெளிவாக்கினால், அவன் ஒரு சுற்றுச் சுற்றி வேறு வகையாக நின்று, தெற்கை வடக்கு என்பான்; வடக்கைத் தெற்கு என்பான். கையால் பற்றியோ, கண்ணால் கண்டோ, செவியால் கேட்டோ அறிய முடியாதவற்றை அவன் எள்ளுவான்; அவனுடைய அறிவுலகத்தில் அவற்றை மூட நம்பிக்கை எனத் தள்ளுவான்.

ஆறுவயது சிறுவனுக்கு இவை எட்டாதவை. பதினாறு வயது இளைஞனுக்குக் கீழ்வீடு மேல்வீடு என்பவை பெரு மயக்கம் விளைக்கின்றன. நாட்டுப்பற்றுக் கொண்ட இளைஞனுக்குக் கீழ்நாடு மேல்நாடு எனனும தொடர்கள் திசைப்

பைத் தருகின்றன. இவையெல்லாம் சொல்லால் வரும் மயக்கம். ஆனால் அறுபது வயது நிரம்பிய முதியவர்க்கும் திசைமயக்கம் உண்டு. புதிய ஊருக்குச் சென்றவர் பலர் நண்பகலிலும் இரவிலும் திசையறியாமல் மயங்குகிறார்கள்; அறிவித்தாலும், " இது எப்படித் தெற்காகும், இதுதானே வடக்கு " எனத் தயங்குகிறார்கள். ஆகையால், திசையறி யாத் திருவேங்கடத்தின்மீது குற்றமே இல்லை.

அவன் நம்பிக்கையோடு வீட்டை நாடிப் பாட்டியை நினைந்து நடந்த சாலை கண்ணமலைச்சாலை எனப்படும். அவன் சென்ற திசையோ தெற்கு. செல்ல வேண்டியதோ கிழக்கே உள்ள ஆலங்காயச் சாலை. இரண்டும் ஓரிடத்தி லிருந்து பிரியும்போது வேறுபாடு தெரியுமா? வண்டிகளின் சக்கரம் சென்று சென்று தேய்ந்த தேய்வும், இரு புறமும் எழுந்து விளங்கும் கற்களின் தோற்றமும், மக்கள் நட மாட்டமும், மரங்களின் தலையசைவும் திருவேங்கடத்தின் உள்ளத்தில், 'வந்த வழி இதுதான்' என்ற நம்பிக்கையை விளைத்துவிட்டன. ஆகையால், முதலிலேயே " இது தானா வழி " என்ற ஐயமே எழவில்லை. அவனுடைய மனம் நினைந்ததெல்லாம் " பொழுது போவதற்குள் போக வேண்டும் " என்னும் ஒன்றே.

அப்போது மணி ஆறரை. பொழுது எனப்படும் கதிரவன் மேற்குத் திசையில் மறைந்தான். அவனைத் தொடர்ந்து செல்லும் ஒளி இன்னும் ஊரை விட்டுப் பிரிய மனமில்லாமல் எட்டி எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தது. விளக்கொளி அங்கங்கே வந்து பரவிக்கொண்டிருந்தது.

திருவேங்கடம் நடந்தான். அவனுடைய கால்கள் சாலையில் நடந்தன. மனமோ தான் பழகிய அந்தத் தெருவை நாடியது; ஆனால் கடைத்தெருவோ இல்லை; அதனை

அடுத்த முத்துக்காரத் தெரு முனையோ வரவில்லை. பள்ளிக் கூடக் கட்டிடமோ கண்ணிற்கே தெரியவில்லை. வீடோ இருப்பதாகவே தெரியவில்லை. இவையெல்லாம் இனி வரும் என்னும் நம்பிக்கை தளர்ந்தது. இரண்டு பர்லாங்கு நடந்ததும் வீடுகள் ஒழுங்காக ஒன்றை ஒன்று அடுத்து அடர்ந்திருப்பது போய், அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சிதறிக் காணப்பட்டன. பிறகு, அவையும் அற்றன. தெருக்கள் ஒன்றும் இல்லை; தொலைவில் சிறு குடிசைகள் தெரிந்தன. வெறுந் தரையும் காணப்படாமல் எவையோ நெல்லும் புல்லும்போல் தோன்றின. நெல் விளையும் மரம் என்று கூறினாலும் உண்மை என்று நம்பும் திருவேங்கடம், இதற்கு முன் காணாத வயல்களைக் கண்டான். அவற்றைப் பாடத்திலும் படித்திராத காரணத்தால் காடு என எண்ணினான். யானையின் பாடம் முதல் வகுப்பிலேயே வருவதால் யானையை நினைத்தான். "சுகாதாரம் என்பது யானையா, அது எங்கே இருக்கிறது?" என்று கேள்வி கேட்டவனுக்கு விடை வந்து சேர்வதுபோல் தோன்றியது. போதாக் குறைக்கு ஒளியெல்லாம் மறைய, ஊர் இல்லாக் குறையால் விளக்கொளியும் இல்லாதிருக்க, இருள் மூடியது. அந்த இருளைக் கண்டு அஞ்சி அலறினான். அதற்கு முன் ஆண்டில் தன் தமக்கையரோடு சேர்ந்து கூடத்து விளக்கு அணைந்தபோது இருளைக் கண்டு கூக்குரலிட்டு நடுங்கி அஞ்சின அச்சம் இப்போதும் அடைந்தான். தெரு முனையும் பள்ளிக்கூடக் கட்டிடமும், முறுக்குக் கடையும் மற்றவைகளும் தோன்றாமையால் மயங்கிக் கலங்கினான். இனி வீடும் வருமா, பாட்டியும் அம்மாவும் வருவாரா என நினைந்து விம்மினான். பித்தர்மனம் கொண்டு நினைப்பற்று, வெறியர்மனம் கொண்டு விரைந்து நடந்தான். பொறி புலன்கள் நெறி கலங்கி, நாடி நரம்புகள் நிலை தடுமாறி, கால்கள் யந்திரம் போல் இயங்கின. நடை ஓட்டமாயிற்று;

விம்மல். அழுகையாயிற்று; எண்ணம் அலறலாயிற்று. பாட்டியை அம்மா என்று அழைக்கும் மனத்தில் 'அம்மா' என்ற ஒலியே எண்ணமாய் நிற்க, அதுவே அலறலாயிற்று. "அம்மா, அம்மா" எனக் கூவியபடியே அழுதுகொண்டு ஓடினான் சிறுவன். அந்த நள்ளிருளில் அவன்செவியில் ஒன்றும் கேட்கவில்லை. குள்ளநரிகள் ஊளையிட்டன. மற்ற விலங்குகள் உறுமின. அலறலுக்கும் அழுகைக்கும் இடையே ஒன்றும் கேட்கவில்லை; பாட்டியை நினைத்த மனம் அச்சம் மீதூர்ந்து அவன் செவியைச் செவிடாக்கிற்று. சாலையின் இருமருங்கும் என்ன இருந்தன என்பதை அவன் கண்கள் அறியவில்லை. அச்சத்தை வளர்த்த இருள் அவனுடைய கண்களின் எதிரே தன்னை ஒழிய வேறொன்றும் தோன்றாதபடி செய்திட்டது. அத்தகைய அருளாவது இருள் என்னும் பேய்க்கு இருந்தது நல்லதாயிற்று. இல்லையானால், அந்தக் குழந்தைக் கண்ணெதிரே அந்தத் தனிமை வெறியிலே எது தோன்றியிருந்தாலும் கொடுமையாய்த் தோன்றியிருக்கும். இருளும் அருள்கொண்டது. இருண்ட வானமும் மருண்ட சாலையும் தவிர வேறொன்றும் அறியாமல் சிறுவன் ஓடினான்.

சிறுவன் தன்னை மறந்தான். கால் ஓட்டத்தை மறக்கவில்லை; வாய் அலறலை மறக்கவில்லை. இரண்டு கல் தொலைவு ஓடிவந்தாயிற்று. கூப்பிடு தூரத்தில் விளக்கு ஒன்று தெரிந்தது. இருவர் பேச்சுக் கேட்டது. தன் பாட்டியோ என எண்ணினான் சிறுவன். எண்ணியதும் தன்னை நினைத்தான்; காலின் ஓட்டமும் வாயின் அலறலும் பன்மடங்கு மிகுந்தன. அழுகைக் குரல் இருவர் மனத்தையும் உருக்கிற்று.

"யாரப்பா? தம்பீ! அழாதே வா, வா அப்பா" என்று விளக்கு வைத்துக்கொண்டிருந்த அந்த இருவரும் கூவி

அழைத்தார்கள். அந்தக் குரலும் இந்தச் செவிகளில் விழ வில்லை. சிறுவன் அலறலைக் காண மனம் பொறுக்காதவர் களாய், அவர்கள் எதிரே ஓடிவந்து அவனை அப்படியே ஏற்றுக்கொண்டார்கள். "எந்த ஊர் அப்பா? எங்கே இருந்து வருகிறாய் அப்பா?" என்றெல்லாம் அவர்கள் கேட்ட கேள்விகளுக்குச் சிறுவன் வாய்திறக்கவில்லை. அவர் களிடம் நிற்காமல் அவன் ஓடத் தொடங்கினான். "அம்மா, அம்மா" என்றான். அவன் மனம் மருண்டு வெறி கொண் டிருப்பதை ஒருவர் உணர்ந்து, "அதோ அம்மா காத்திருக் கிறார்கள்; வா, போகலாம்" என்று தூக்கித் தோளமேல் வைத்துக்கொண்டு நடந்தார். அப்போதும் அழுகையும் அலறலும் ஓயவில்லை; சிறிது குறைந்தது; அவ்வளவே.

விளக்குடன் இருவரும நின்றது நாய்க்கன்பட்டி என்ற ஊரையடுத்துச் சிறிது தொலைவிலாகும். தங்கள் நிலத்தில் ஏதோ வேலையாக வந்து பார்த்துவிட்டு அவர்கள் ஊருக் குத் திரும்பும் நேரம் அது. சிறுவனின் நிலையைக் கண்டு மனம் உருகி நின்றார்கள். ஊருக்குள் சென்று மணியக் காரரின் திண்ணைமேல் சிறுவனை விட்டார்கள். விட்டதும் பாட்டியைக் காணாத சிறுவன் ஏமாற்றம் மிகுந்து அலறி னான். ஊர் திருப்பத்தூரே என்று வந்ததிசையால் அறிந்து கொண்ட மணியக்காரர் "தெரு என்ன?" என்று கேட்டார். அதற்கும் வாய் திறக்காமல் இருந்தது கண்டு சிறிது பொறுக்கச் சொல்லித் திரளாகக் கூடிய மக்களை அப்புறப் படுத்தினார். பாலும் பழமும் கொண்டுவந்து கொடுத்துப் பார்த்தார். பாலைக் குடித்தால் அம்மாவிடம் கொண்டு போய்ச் சேர்ப்பதாக இரண்டு மூன்று பேர் வேண்டினார்கள். ஓர் அம்மையாரும் வந்து கெஞ்சினார். பால் சிறிது உள்ளே சென்று உலர்ந்த தொண்டையை நனைத்தது. "புறப்படு, போகலாம். நான் கொண்டுபோய் அம்மாவிடம் விட்டுவிட்டு

வருவேன் ” என்று எழுந்தார் மணியக்காரர். “எனக்குத் தெரியும் இவனுடைய வீடு. நான் காட்டுவேன்” என்று பொய் சொன்னார் மற்றொருவர்.

சிறுவன் முகத்திலே சிறிது தெளிவு காணப்பட்டது. நம்பிக்கை என்னும் மருந்து சிறிதளவு பயன்பட்டிருப்பதை உணர்ந்ததும், ஒருவர், “அப்பா! உன் அப்பா பெயர் சொல்லு” என்றார். “நயனு” என்று மறுமொழி வந்தது. அம்மாவின பெயர் கேட்க, “அமமாக்கண்ணு” என்று சிறுவன் விம்மலுக்கிடையே சொனனான். “நீ எங்கே படிக்கிறாய்?” என்ற வினவுக்குப் “பள்ளிக்கூடத்தில்” என்று விடை வந்தது. சிறுவனுடைய துன்பம் கண்டு நகைச்சுவை இடம் பெறாமல் போயிற்று. ஒருவர் இருவர் பல்லைக் காட்டத் தொடங்கினார்கள். ஆனால் மணியக்காரரின் முகத்தைக் கண்டு அடங்கினார்கள். மறுநாள் காலையில் செல்லலாம் என்றார் கணக்குப்பிள்ளை. பையனைவிடப் பெற்றோர் எவ்வளவு துன்பப்படுகிறார்களோ என்று சொல்லிக் கொண்டே கை விளக்குடன் மணியக்காரர் நடந்தார். திருவேங்கடம் ஒருவர்தோள்மேல் இருந்தபடி உறங்கிவிட்டான். மெல்ல ஊர்வந்து சேரலாயினர்.

இதற்குள் முத்துக்காரத் தெருவும் அடுத்த சில தெருக்களும் அமர்க்களமாகிவிட்டன.

கொண்டாட்டம் முடிந்துவிட்டது. சிறுவர்களை அணி வகுத்து நிற்கச் செய்தார் தலைமையாசிரியர். அப்போது அவர் திடீரெனத் திருவேங்கடத்தை நினைத்தார். சுற்றிச் சுற்றிப் பார்த்தார். மற்ற ஆசிரியர்களைக் கேட்டார். தெருப் பிள்ளைகளைக் கேட்டார். ஒவ்வொருவரும் மற்றவரின் முகங்களை நோக்கி நோக்கித் திகைக்கலாயினர். தலைமையாசிரியரின் கண்முன்னே பல காட்சிகள் வந்து நின்றன.

" வாத்தியாரே ! பையனைப் பார்த்துக்கொள்ளுங்கள். அவன் குழந்தை ; ஒன்றும் அறியாதவன் ; வீடுவந்து சேரும் வரையில் உங்கள பொறுப்பு. அப்படியானால் அழைத்துக் கொண்டு போகலாம் " என்ற ஒலிகள் அவருடைய செவியில் கேட்டன. " பெரியம்மா ! நாங்கள் பார்த்துக்கொள்வோம் " என்று தேறுதல் சொன்னதையும் நினைத்தார் ; திடுக்கிட்டார் ; திகைத்தார். மற்ற ஆசிரியர்களைப் பார்த்து, " நீங்கள் இவர்களை ஒருவரையும் விடாமல் அழைத்துக்கொண்டு வாருங்கள். நான் முன்னே பள்ளிக்கூடத்திற்குப் போகிறேன் " என்று சொல்லி விரைந்தார்.

தெருவினுள் நுழையுமுன் பேரனை அழைக்க வந்த பாட்டியார் தெருமுனையில் நிற்பதைக் கண்டார். " வாத்தியாரே ! பையன் எங்கே ?" என்று பாட்டியார் அலறுவதற்கு முன், " பையன் வீட்டுக்கு வந்துவிட்டானா " என்று தலைமையாசிரியர் கேட்டுவிட்டார். " இல்லையே " என்றார் அம்மையார். " எங்கே போயிருப்பான் ?" என்றார் ஆசிரியர். " எங்கே ஐயா ! எங்கே ஐயா விட்டுவிட்டீர்கள் ?" என்று கதறினார் அம்மையார். கலங்கினார் ஆசிரியர்.

ஆசிரியர் அங்கேயே திகைத்து நிற்பதும் தெரியாமல், அம்மையார் கடைத்தெரு வழியாகப் பறந்தார். சுற்றிலும் பார்வை ஓடிற்று. " எங்கேடா போய்விட்டாய், கண்ணே " என்று கதறிவிட்டு வெளியே சென்றார். அவருடைய குரல் ஒலித்துக்கொண்டே நடுங்கிற்று. மீண்டும் வந்தார். வீட்டினுள் புகுந்து " அம்மாக்கண்ணு ! பையன் இல்லையாமே " என்று அலறினார். பாட்டியார், அன்னையார், தமக்கையர் எல்லாரும் மூலைமுடுக்கெல்லாம் விளக்குக் கொண்டு தேடத் தொடங்கினார்கள்.

தலைமையாசிரியர் பொறுப்பை உணர்ந்து தக்க ஏற்பாடுகளை விரைந்து செய்தார். முன்னே சென்று போலீசில்

எழுதிவைத்துவிட்டு மற்ற ஆசிரியர்களை ஏவி ஊரெல்லாம் தேடச் செய்தார். பாட்டியாரிடம் மறுபடியும் எதிர்ப்பட்டார். "பெரியம்மா! உங்கள பேரனைத் தேடிக்கொண்டு வந்து வீடு சேர்க்காமல், நான் சாப்பிடுவதில்லை. நாள் எத்தனை ஆனாலும் ஆகட்டும்" என்றார். "அப்போதே சொன்னேனே ஐயா! வாத்தியார் என்று நம்பி அனுப்பினேனே ஐயா! தவமிருந்து பெற்றேனே ஐயா! குழந்தையை அனுப்பிவிட்டேனே ஐயா! எங்கே போய்விட்டானோ! குழந்தை எப்படி ஏமாந்துவிட்டானோ ஐயா! எங்கே கலங்குகிறானோ! அப்போதே சொன்னேனே ஐயா!" என்று அலறியதைக் கேட்ட தலைமையாசிரியர் கண்ணீர் வடித்தார்.

மீண்டும் போலீசாரிடம் சென்றார்; எதிரே நாய்க்கன் பட்டி மணியக்காரர் கையில் பிடித்த விளக்கையும் பின்னே வருபவரின் தோள்மேல் உறங்கும் சிறுவனையும் கண்டார்; பெருமூச்சு விட்டு நின்றார். "திருவேங்கடம்" என்றார்.

* * *

இது ஒரு கதை. இந்தக் கதையை என்மேல் ஏற்றிச் சொல்வார்கள் என்னுடைய பாட்டியாரும் அன்னையாரும். என்னுடைய இளமையிலேயே அடிக்கடி இந்தக் கதையைச் சொல்வார்கள். நான்தான் அடிக்கடி ஓடிப்போன பையன் என்று அவர்கள் சொல்லும்போதெல்லாம் எனக்குச் சினம் எழும்; வெட்கமும் வருத்தும். இதை எத்தனை நாள் பொறுத்திருப்பேன்? சில நாட்களில் ஒரே வெறுப்பாய், கதை சொன்ன பாட்டியாரிடமும் அன்னையாரிடமும் பேசாமலிருந்துவிடுவேன். என்னுடைய பெரிய தமக்கை இந்தக் கதையைச் சொல்லி என்னைக் கேலி செய்தது எனக்கு நினைவு இல்லை. அந்த அருமைத் தமக்கை எனக்கு

நல்ல நினைவு நிலைக்கும் முன்பே என் எட்டாம் வயதில் காலமானார். சிறிய தமக்கை என்றோ ஒருநாள் யாருடனோ வது இதைப் பேசிக்கொண் டிருக்கக் கேட்டாலும் சினங் கொண்டு போராடிவந்தேன்.

இந்தக் கதையும் கலக்கமும் வீட்டளவில் நிற்கவில்லை. மூன்றாவது நான்காவது வகுப்புக்களில் படிக்கும்போதெல் லாம் அந்தத் தலைமையாசிரியரைக் காணும் வேளைகளில் என் உள்ளத்தே போராட்டம் நிகழும். அவருடைய பார் வையோ, கையோ, கையிலிருந்த மொக்கைப் பிரம்போ என் கலக்கத்திற்குக் காரணம் அல்ல.

என்மீது தவறு காணமல் என் ஒழுங்கையும் படிப் பையும் தலைமையாசிரியர் போற்றும்போது என் பெயரைச் சொல்லி அழைப்பார். என்னிடம் பாடத்திலோ ஒழுங்கிலோ குறை கண்டபோதோ, அல்லது என்னை எள்ளி நகையாட வேண்டும் என்று அவருக்குத் தோன்றியபோதோ அவர் என் பெயரைச் சொல்லி அழைப்பதில்லை. பெயரைச் சொல் லாமல் குறும்பு செய்தாலும் கவலைப்பட்டிருக்கமாட்டேன் ; வேறு குறும்புப் பெயர்களைக்கொண்டு எள்ளினாலும் ஏங்கி யிருக்கமாட்டேன். ஆனால் என் கலக்கத்திற்குக் காரணம் ஒன்றே ! அதுதான் அந்தக் கதை. கதையை என் பாட்டி யார் அன்னையார் போல முழுதும் சொன்னாலும் அவ்வளவு கவலை இருந்திருக்காது. ஆனால் கதை முழுமைக்கும் ஒரு தலைப்புக் கொடுப்பது போல் என்னை அவர் அழைத்தது தான் என் மனத்தை நோகச் செய்தது. அவர் என்னை " நாய்க்கன்பட்டியான் " என்று அழைத்தபோதெல்லாம் நான் அமைந்தேன்.

ஆசிரியர் என்னைவிட வலியவர். அவர்மீது சினங் கொள்ள எனக்கு வலிமை இல்லாமல் போயிற்று. ஆனால் என் மனம் வாளா இருப்பதில்லை. வீட்டிற்கு வந்ததும்

அவ்வளவு சினத்தையும் பாட்டியாரிடம் காட்டுவேன். "நீ இப்படிச் சொன்ன கதை வாத்தியாருக்கும் யாரோ போய்ச் சொல்லிவிட்டார்கள். திருட்டுப் பையன் யாரோ போய்ச் சொல்லிவிட்டான். அந்தக் கதையைக் கேட்டுக்கொண்டு அவரும் என்னைக் கேலி செய்கிறார். நான் இனிமேல் பள்ளிக்கூடம் போக மாட்டேன்" என்று உடனே மட்டம் போடுவேன்.

இந்தத் தொல்லையைத் தவிர்க்க வேண்டும் என்று எண்ணிப் பாட்டியார் தலைமையாசிரியரிடம் ஒருநாள்சென்று, "பையனை இனிமேல் அப்படி அழைக்க வேண்டாம். அவன் அதனாலேயே கவலைப்பட்டு மெலிந்து துரும்பாய்ப் போகிறான்" என்று சொன்னதாகத் தெரிந்தது.

இவ்வளவும் பழங்கதை. இதுவும் என் நினைவில் இல்லை. இதையும் பிற்காலத்தில் என்னுடைய பாட்டியாரே சொன்னார். பேச்சுவன்மை மிக்க அவர் இதையும் படைத்து மொழிந்திருக்கலாம் என்று எண்ணினேன்.

என்னுடைய தங்கையையும் பாட்டியார் வேடிக்கையாக அழவைப்பது உண்டு. "உன்னைக் கருவேப்பிலைக் காரியிடம் காலணாவிற்கு வாங்கினேன். ஒரு நாள் அவள் குழந்தையாக இருந்த உன்னை முதுகில் கட்டிக்கொண்டு வந்தாள். காலணா கொடுத்தேன். அதற்காக அவள் உன்னைக் கொடுத்துவிட்டுப் போய்விட்டாள். மறுபடியும் அவள் எப்போதாவது வந்து கேட்டால் உன்னைக் கொடுத்து விடுவேன். நீ அவள்பின்னே போக வேண்டும். அவள் தான் உன்னைப் பெற்ற தாய்" என்று தங்கையிடம் பாட்டி சொல்லுவார். தங்கை கண்ணீர் விடும் வரையில் போராட்டத்தை வளர்த்து, "இல்லை, இல்லை. கருவேப்பிலைக்காரி வந்தால் தெருவழியே சேர்க்காமல் துரத்தியடிக்கலாம்" என்று தேறுதல் சொல்லிக் கண்ணீரைத் துடைப்பார்.

தங்கையைப் பற்றி இவ்வாறு கதை சொல்லி ஏமாற்றும்போது எனக்கு ஒரு வகையான விடுதலை கிடைத்தது போல் மனம் மகிழும். என் கதையும் இப்படிப்பட்ட பொய் தான் என்று ஆறுதல் பெறுவேன்.

தங்கைக்கும் இந்த மனம் உண்டு. அவள் தன் கதையை மறந்து என் கதையைக் கேட்பாள். அப்போது பாட்டியார், " அண்ணனா ? அவனை நாய்க்கன்பட்டியில் வாங்கினோம். அதனால்தான் அவன் ஒரே கருப்பாக இருக்கிறான் பார். அங்கேதான் பாலும் பழமும் சாப்பிட்டு வளர்ந்தான். ஒரு நாள் தோள்மீது தூக்கிக்கொண்டு வந்து விற்றுவிட்டுப் போனார்கள். நாங்கள் விலைக்கு வாங்கியபோது வாத்தியாரும் இருந்தார் " என்று சொல்லுவார். இதைக் கேட்ட தங்கை துள்ளி மகிழ்வாள். எனக்குச் சிறிது வருத்தமும் ஏற்படும். தங்கைமேல் சினமும் உண்டாகும்.

ஒருநாள் தங்கையும் நானும் ஒருவரை ஒருவர் எள்ளிப் பேசுவதில்லை என்றும், நான் நாய்க்கன்பட்டி கருப்பன் அல்ல என்றும், அவள் கருவேப்பிலைக்காரி மகள் அல்ல என்றும் உடன்படிக்கை செய்துகொண்டோம். அன்று பாட்டியார் சூழ்ச்சி ஒன்றும் பலிக்கவில்லை. " எங்கள் கதை பொய். அந்தக் கதையெல்லாம் வேண்டாம். அக்காவை எங்கே வாங்கினாய் ? அதைச் சொல் " என்று கேட்டோம். " அக்காவா ? தவிட்டுக்காரியிடம் தவிடு கொஞ்சம் போட்டு அவளிடம் வாங்கினோம். அவள் கோணிப்பையில் அக்காவைக் குழந்தையாகப் போட்டு வைத்திருந்தாள். அதனால் தான் அக்காவின் முகமெல்லாம் புள்ளிபுள்ளியாக இருக்கிறது " என்று தமக்கையின் முகத்தில் உள்ள அம்மைத் தழும்புகளைப் போய்ப் பார்க்கச் சொல்லுவார். உடனே ஓடிப்போய்த் தமக்கையின் முகத்தைப் பார்த்து இருவரும் சிரிப்போம். காரணம் தெரியாமல் தன்னைக் கண்டு சிரிப்

பதால் தமக்கைக்குச் சினம் எழும். நாங்கள் இருவரும் வெளியே ஓடிவந்து பாட்டியாரின் பக்கத்தில் நின்று கொண்டு மனமாரச் சிரிப்போம். எங்கள கதையை மறப் பதற்குத் தமக்கையின் கதை ஒரு துணையாக இருக்கும்.

கருவேப்பிலைக்காரியின் கதை போலவும, தவிட்டுக்காரி யின் கதை போலவும் நாய்க்கன்பட்டிக் கதையும பொய்க் கதை—புனைகதை—என்று நெடுங்காலம் எண்ணிவந்தேன்.

ஆனால், என் நினைவில் மட்டும் மாற்ற முடியாத சில நிகழ்ச்சிகள் மறைந்தும் மறையாமல் இருந்துவந்தன.

இருண்டவழி ஒன்று என் கண்முன் அடிக்கடி வந்து நிற்கும். அந்த வழியில் சிறுபையனாய் அலறி அலறி வெறி பிடித்தாற்போல் ஓடியதாக ஒரு நினைவு எழும். இருமருங் கும் மரச்செறிவும் நெடுந்தொலைவு அடர்ந்த இருட்செறிவும் அந்த நினைவில் நிற்கும். கைவிளக்கு ஒன்று திடீரெனத் தோன்றும். ஒரு திண்ணையில் பால் நிறைந்த கிண்ணமும் பக்கத்தே நான்கு வாழைப்பழமும் சுற்றிலும் ஆண்களும் பெண்களுமாகப் பலரும் தோன்றுதல் உண்டு. இவை யெல் லாம் தோன்றும்போது இவற்றினிடையே சிறுவர்கள் அணி வகுத்த கூட்டமும் தலையில் சரிகைக் குல்லாயும் அரை குறையாகச் சிறிதளவு தோன்றி உடனே மறையும். இத்த கைய நிலையில்லாத் தோற்றங்களுக்கிடையே சிறிது நிலை பெற்றதாய்த் தோன்றுவது ஒனறு உண்டு என்றால், அது இருள் செறிந்த நெடுவழியில் வெறிபிடித்த ஓட்டமே ஆகும் ; இத்தனையும் என் நினைவில் வந்து வந்து போகும். நாளடை வில் அவற்றின் வருகையும் குறைந்துபோயிற்று.

இந்த நினைவும் பொய் என்றே துணிந்திருந்தேன். பாட்டியாரும் மற்றவர்களும் மீண்டும் மீண்டும் சொன்ன நாய்க்கன்பட்டிக் கதையே இந்த நினைவை வளர்த்துப் பதிய

வைத்துவிட்டது என்று முடிவாகக் கருதினேன். அரசிளங் குமரனை அடிக்கடி ஆண்டி ஆண்டி என்று கூறிக் கூறி ஆண்டி யாக்கிவிடலாம் என்று ஒருநாள் உயர்நிலைப் பள்ளியில் எட்டாம் வகுப்பு ஆசிரியர் கூறினார். குளவி புழுக் களைப் பிடித்துக்கொண்டுபோய்க் குளவியாக்கிவிடுவதாகச் சொல்லி, அதனை விளக்குவதற்காக அரசிளங்குமரனுடைய கதையைச் சொன்னார். என் கதையும் இப்படித்தான் ஆய் விட்டது என எண்ணினேன். பாட்டியாரும் மற்றவர்களும் அடிக்கடி ஓடிப்போன பையன் ஓடிப்போன பையன் என்று சொல்லிச் சொல்லி, என் நினைவு இவ்வாறு மாறிவிட்டிருக்க லாம் என எண்ணினேன். எனவே, இருள் செறிந்த நெடு வழியும் பொய் நினைவே, அலறி ஓடிய ஓட்டமும் பொய் நினைவே என்று தெளிந்தேன்.

நான் பத்தாவது படித்துக்கொண் டிருந்தபோது தொடக்கப்பள்ளியிலிருந்து தலைமையாசிரியர் எதிர்பாராமல் நான் இருந்த வகுப்பிற்கு வந்தார். என் வகுப்பில் அப்போது கற்பித்துக்கொண்டிருந்தவர் உயர்நிலைப்பள்ளியின் தலைமை யாசிரியர். அவரைக் காண வேண்டும் என்றே அவர் அங்கே வந்தார், கண்டு பேசினார். வகுப்பு முடியும் மணியும் அடித் தது. அப்போது அவர் என்னைப் பார்த்ததும், " என்ன நாய்க்கன்பட்டியான் !" என்றார். என் முகம் சுண்டக்காயாய்ச் சுருங்கிற்று. அவரோடு பேசுவதற்கு வெறுத்தோ அஞ்சி யோ பின்வாங்கினேன். உடன் வந்த மாணவர் இருவர், " என்னடா, அவர் உன்னை அப்படி அழைக்கிறார் ?" என்றனர். இன்னொருவன், " நாய்க்கன்பட்டியான் ! என் னப்பா ?" என்றான். மற்றொருவன், " உங்கள் ஊரா அது ? நாய்க்கன்பட்டி எனக்குத் தெரியுமே! எந்தத் தெரு ?" என்று கேட்டான். நான் தப்பித்துக்கொள்ள வழியில்லாமல் திகைத் தேன். பிறகு ஒரு பொய் கூறத் துணிவு பிறந்தது. என்

மூளையில் தோன்றிய பொய்யை வாயார வாழ்த்தினேன். மாணவ நண்பர்களைத் தலைநிமிர்ந்து பார்த்து ஒரு கோணல் சிரிப்புச் சிரித்தேன். “அவருக்கு நினைவு சரியாக இல்லை போல் தெரிகிறது. யாரையோ பார்த்து என்னவோ பேசுகிருர். அவருடைய மூளையை ஆராய்ச்சி செய்ய வேண்டியது தான்” என்றேன். மாணவர்கள் என்னோடு சேர்ந்து சிரித்தார்கள். அன்றைக்கு அந்த ஊரையும் பேரையும் மறந்தார்கள்.

ஆனல், என் உள்ளத்தில் மட்டும் கவலை இருந்து வந்தது. வெளியே நடந்தேன். உள்ளே நைந்தேன். வீட்டிற்குச் சென்றதும் வாடியிருந்தேன். பாட்டியார் என் வாட்டம் உணர்ந்து காரணம் கேட்டார். நான் வாய் திறக்கவில்லை. “படிப்பு, படிப்பு என்று நாளுக்கு நாள் பையன் கவலைப்படுகிருன்; கரைந்து போகிருன். இன்னும் ஏழெட்டு மாதத்தில் ஒழிந்து போய்விடும் இந்தப் படிப்பு. வெள்ளைக் காகிதத்தையும் கருப்பு எழுத்தையும் ஓயாமல் பார்த்துப் பார்த்து வாடிப் போகிருன்” என்று சொல்லி வருந்திஞர். அன்று முதல் என்னை வாரத்திற்கு இருமுறை தவருமல் எண்ணெய் தேய்த்துக் குளிக்கச்செய்தார். உண்ணும்போது நெய்யும் தயிரும் மிகுதியாகக் கிடைத்தன. உறங்குவதற்குமுன் குடிக்கப் பாலும் மிகுதியாகக் கிடைத்தது. அடுத்த வாரத்தில் வெண்ணிறப் பசு ஒன்று வீட்டு வாயிலில் வந்துநின்றது. பாலைக் கண்டால் எனக்கு வெறுப்பு வரும் வரையில் என்னை விடவில்லை.

பள்ளிப்படிப்பு முடிந்தது. தொழில் நிலையம் என்னை வரவேற்றது. திருமணப் பேச்சும் முயற்சியும் வளர்ந்தன. பாட்டியாரை எதிர்த்துப் புரட்சி செய்யும் முயற்சியும் என்னிடம் வளர்ந்தது. ஆயினும், அவர் என்னைப் பொறுப் புணர்ந்த மனிதன் என்று எண்ணுமல், ஒன்றும் அறியாக்

குழந்தை என்றே எண்ணிவந்தார். எனக்கோ அது பிடிக்கவில்லை.

யாராவது நண்பர்கள் என்னிடம் வந்து பேசிக்கொண்டிருக்கும்போது, பாட்டியாரும் என் அருகே வந்து உட்கார்ந்துகொண்டு பேச்சில் தலையிடுவார்; "பையனுக்குப் பேசக்கூடத் தெரியாது. யார் யாரோ வந்து ஏமாற்றிவிடுவார்கள். நானும் போய்க் கவனித்துத் துணையாகப் பேச வேண்டும்" என்று அந்த அன்புமனம் எண்ணியது. ஆனால், எனக்கோ அது பிடிக்கவில்லை.

காலையில் வீட்டை விட்டுத் தொழில்நிலையத்திற்குப் புறப்படும்போது, "அடே அப்பா! பொழுதுபோவதற்குள் வீட்டுக்கு வந்துவிடு அப்பா" என்று சொல்லி ஏழடி வந்து வழியனுப்புவார். "இருளைக் கண்டால் பையன் பயப்படுவான்" என்று அந்த அன்புமனம் உருகியது. ஆனால் எனக்கோ அது பிடிக்கவில்லை.

மாலையில் விளக்கு வைத்திடும் நேரத்தில் வீட்டிற்கு நான் திரும்பிவரவில்லையானால், பாட்டியாரின் கால்கள் வீட்டில் நிற்பதில்லை; பரபர என்று நடந்து தெருமுனையில் இரிந்துகொண்டிருக்கும். "பையன் இன்னும் வரவில்லையே! உடம்பு நல்லபடி இல்லையா? எங்கேயாவது சோர்ந்து உட்கார்ந்துவிட்டானு? போய் வரலாமா?" என்று அந்த அன்பு நெஞ்சம் அலையும். ஆனால் எனக்கோ அது பிடிக்கவில்லை.

ஒருநாள் நான் ஏழரை மணிக்கு வீடு திரும்ப நேர்ந்தது. நண்பர்களோடு பேசிக்கொண்டே புகைவண்டி நிலையத்தில் நேரத்தைப் போக்கினேன். "நேரமாயிற்று என்று அந்தக் கிழம் தேடிக்கொண்டிருக்கும், சொன்னாலும் கேட்டுத் தொலைப்பதில்லை" என்று மனத்திற்குள் எண்ணி, வெளியே நண்பர்களுக்கு, "எனக்கு உடம்பு நன்றாக இல்லை. பசி

யாகவும் இருக்கிறது. நான்மட்டும் போகிறேன்" என்று சொல்லி விடைபெற்று விரைந்தேன். எதிரே அந்த அன்புருவம் வந்துகொண்டிருந்ததைப் பார்த்து முதலில் மனம் உருகினேன். பிறகு ஒருவாறு வெறுப்புக்கொண்டு, சினமுற்றவன்போல் நடித்து, "ஏன் அம்மா? நீ ஏன் வரவேண்டும்? நான் என்ன சின்ன குழந்தையா? உன் தொல்லைக்குப் பயந்தே எங்கேயாவது வெளியூருக்குப் போய்க் குடும்பத்தார் இல்லாமல் வாழப்போகிறேன். நீ உன்பாட்டுக்கு வீட்டில் கிடப்பதுதானே? உன்னால் எனக்கு அவமானமாகவும் இருக்கிறது. பள்ளிக்கூடத்தில் படிக்கும்போதும் இப்படித்தான்! அப்போதாவது பிள்ளையார்பூசை செய்ய வேண்டும் என்று உயிரை எடுத்தாய்; இப்போது என்ன இருக்கிறது? ஏன் தேடிக்கொண்டு வரவேண்டும்?" என்று ஆத்திரத்தைக் கொட்டினேன். "நேரம் ஆய்விட்டதே அப்பா" என்பதையே அந்த அன்புருவம் திருப்பித் திருப்பி விடையாக மொழிந்தது.

நான் வளர்ந்து இருபதாண்டு இளைஞன் ஆனேன். பாட்டியாரும் வளர்ந்து அறுபத்தைந்தாண்டு கிழவி ஆனார். நரை மட்டும் இருந்த நிலை மாறித் திரையும் வந்துற்றது; நடையில் தளர்ச்சியும் பேச்சில் சோர்வும் வந்துற்றன. என் மனம் வளர்ந்தது. ஆனால் பாட்டியாரின் மனம் வளரவில்லை. அன்பு மனத்திற்கு வளர்ச்சி என்பதே இல்லை போல் தெரிகிறது. பாட்டியாருக்கு நான இன்னும் ஆறுண்டுள்ள சிறுவனாகவே இருந்தேன். இருபதாண்டு நிரம்பியும் அவருக்குச் சிறு பையனாகவே தோன்றினேன். அன்று இரவு தேடிவந்ததன் காரணம் அது தான். நான் அடிக்கடி மறந்துவிட்ட நாய்க்கன்பட்டிக் கதையை அவர் மறக்கவில்லை. புகைவண்டி நிலையத்தில் பேசிக்கொண்டிருந்து திரும்பிய அன்றிரவு அந்தப் பாட்டியாரின் மனம் இருண்ட வழியையும்

பொழுது போனதையும் நினைந்தது. என்னைக் கண்டதும், "நேரம் ஆய்விட்டது அப்பா! இருட்டிப் போய்விட்டது அப்பா" என்று பலமுறை எனக்கு விடையாகச் சொன்ன காரணமும் அது தான். அன்பு மனத்திற்கு வளர்ச்சி இல்லை என்பது போலவே, மறப்பும் இல்லைபோல் தெரிகிறது.

அந்த ஊரை விட்டும வெளியேற நேர்ந்தது. ஊதியம் மிக்க தொழில் வெளியூரில் கிடைத்தமையால் அவ்வாறு வெளியேற நேர்ந்தது. ஆடி ஓடின இடங்களையும், அரட்டையடித்த இடங்களையும், அமர்ந்து மகிழ்ந்த இடங்களையும், பலநாள் கண்ட காட்சிகளையும், பலவகையாக நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் எண்ணி எண்ணி உருகினேன். என்னைப் பெற்று வளர்த்துப் பாராட்டிய அந்த ஊர், அருமையான அன்னை போல் என் உள்ளத்தில் தோன்றியது. கலங்கினேன்; உருகினேன்; கண்ணீர் வடித்தேன்; நண்பர்கள் காணாதபடி கண்களைத் துடைத்தேன். புகை வண்டி நகர்ந்தது; கண்ணீர் பெருக்கெடுத்தது; உள்ளம் நைந்தது.

ஓராண்டு கழிந்தபின் அந்த ஊருக்குச் சென்று நண்பர்களைக் காணப் புறப்பட்டேன். புகைவண்டி நிலையத்தில் நின்றதும் அந்தக் கல்தரையும், நிலயத்தை அடுத்துள்ள வெளியில் தண்டவாள வேலியும், அதனுள் நின்ற மாட்டு வண்டிகளும், என்முன் தோன்றிய சாலையும், சாலையின் மரங்களும், மரங்களின் நிழலில் நின்ற நெடு மாடிகளும் என்னை வரவேற்றன. தலைநிமிர்ந்து நோக்கினேன். அந்த நீலவானம் என்னுடன் உரிமை பாராட்டியது. அத்தகைய நீலவானம் கண்டு நெடுநாள் ஆனதாக எனக்குத் தோன்றியது. தொலைவில் தெரிந்த நீலமலை என் பழைய நட்பை மறக்கவில்லை. நீர் காணாத பழைய ஏரி என் பிரிவாற்றாப் பேச்சுக்களை மறக்கவில்லை. சாலையில் ஊர்ந்த எறும்புகளும்

என் உள்ளத்திற்கு உவகை அளித்தன. அங்கும் இங்கும் காணப்பட்ட நாயும் கழுதையும் கூட எனக்குப் பழைய நண் பர்களைக் கண்டாற் போன்ற களிப்பைத் தந்தன.

பழைய தலைமையாசிரியர் என் கண்ணில் தென்பட் டார். அது யாரும் இல்லாத இடமாக இருந்திருந்தால் அவரைக் கண்டதும் நான் குதித்தோடியிருப்பேன். ஆனல் கடைத்தெருவாக இருந்தமையாலும் பலர் சூழ இருந்தமை யாலும் நடந்தே சென்றேன். ஆயினும் என் உள்ளக் களிப்பு என் குழறுமொழியில் வெளிப்பட்டது. " சார்! நினைவிருக்கிறதா, சார்! உங்களிடம் படித்தவன் திருவேங் கடம் !" என்றேன்.

" எப்போது வந்தாய்? எங்கே இருக்கிருய்? நினைவு இல்லாமல் போகுமா ?" என்று அவர் தம் மீசையை நீட்டி விட்டு அன்போடு பார்த்தார், கனைத்தார், தோள்மேல் கை வைத்தார்.

" உங்களிடம் தராசுக் கணக்கு ஒரு நாள் கற்றுக் கொண்டது நினைவு இருக்கிறது. கனமான தட்டுத்தான் மேலே போகும்; கனமில்லாத தட்டுத்தான் கீழே இறங் கும் என்று சொன்னேனே, அதற்குப் பிரம்பால் பழுக்கப் பார்த்தீர்களே ! உங்களுக்கு நினைவு இருக்கிறதா ?" என்று கேட்டேன்.

" அதெல்லாம் எனக்கு ஒன்றும் நினைவுக்கு வரவில்லை. ஆனல் உன் பாட்டியார் உன்னை அழைத்துக்கொண்டு வரு வதும் பையனை பார்த்துக்கொள்ளுங்கள் என்று சொல் வதும் நினைவுக்கு வருகின்றன. தவிர, உன் பாட்டி நல்ல மனம் அப்பா ! அன்பு என்ருல் அந்த அம்மாவிடத்தில் தான் பார்க்கவேண்டும். அதுபோல் நான் பார்த்ததே இல்லை. ஒருநாள் நீ காணுமற்போய்விட்டாய். அப்பப்பா! உன் பாட்டி

பட்ட பாடு சொல்ல முடியாது. வாத்தியார் என்று நம்பித் தானே உன்னோடு அனுப்பினேன் என்று என்னைச் சரியான கேள்வி கேட்டார்கள் அந்த அம்மா. இப்போது எப்படி இருக்கிறார்கள் ?" என்றார்.

" வயசு ஆய்விட்டது. வலுவும் குறைந்துவிட்டது. எழுபதுக்கு ஏறக்குறைய ஆகிவிட்டது. முன்போல் அங்கே இங்கே போக முடியவில்லை" என்றேன்.

" போதும், போதும். இவ்வளவு காலம் இருந்து உன்னை முன்னுக்குக் கொண்டுவந்தது போதும். இனிமேல் நல்ல படியே இருந்து போய்விடுவது நல்லது" என்றார். மீண்டும் சிறிது பொறுத்து, " முன்னெல்லாம் உன்னை நாய்க்கன்பட்டியான் என்று கூப்பிடுவேன். உனக்கு வருத்தமாயிருக்கும். இப்போது பெரியவனாய்விட்டாய். நல்ல நிலையில் இருக்கிறாய். கடவுள் காப்பாற்றுவார். இவ்வளவு அன்போடு பார்த்துப் பேசினாயே அதுவே போதும்" என்றார்.

என் மனத்தில் பழைய கலக்கம் முழுதும் ஏற்படவில்லை. அதன் சாயல் மட்டும் புகுந்தது. நாய்க்கன் பட்டிக் கதை பொய்க் கதைதானே என்று கேட்டுவிட வாயெடுத்தேன். ஆனால் காணாமல்போன நிகழ்ச்சி என்று சொன்னாரே, மெய்யாகத்தானே இருக்கும் என்று தயங்கினேன். ஒரு வேளை அது வேறு நிகழ்ச்சியாக இருக்கலாம் என்று ஐயுற்றுப் பேசாமல் இருந்தேன். அவரே பேச்சுத் தொடர்ந்தார்.

" எனக்கு 55 வயசு ஆய்விட்டது. நானும் வேலையிலிருந்து ஓய்வு பெற்று மூன்று மாதம் ஆய்விட்டது. இங்கே ஒரு வீட்டிலும், செட்டித்தெருவில் இரண்டு வீட்டிலும் தனிப்பாடம் சொல்லிக்கொடுத்துக் காலம் கழிக்கிறேன்" என்றார். அந்தக் குரலில் துன்பவாடை கலந்துவருதலை

உணர்ந்து வருந்தினேன். மனம் கசிந்து விடை பெற்றுச் சென்றேன்.

“பாட்டியார் நல்லபடி இருந்து போய்விட வேண்டும்” என்று தலைமையாசிரியர் சொன்னது இன்னும் என் செவி யில் ஒலித்துக்கொண் டிருக்கிறது. அந்தச் சொல்லை நான் மறக்க முடியாது ; மறக்க முடியாதபடி என் குடும்ப நிலைமை மாறிவிட்டது.

பாட்டியார் இப்போது பைத்தியம் பிடித்துத் தன்னை யும் என்னையும் மறந்திருக்கிறார். என்னை அன்போடு பார்த்த கண்கள் இப்போது எவற்றையோ சுற்றிச் சுற்றிப் பார்த்து மருள்கின்றன. எனக்காக அன்புகொண்டு சோறும் காயும் அள்ளியிட்ட கைகள் இப்போது கண்ட இடத்திலெல்லாம மண்ணும் கல்லும் அள்ளுகின்றன. அன்பு மிகுதியால் இன்குரல் கொண்டு கசிந்து ‘திருவேங்கடம்! திருவேங் கடம்!’ என்று அழைத்த வாய் இப்போது பொருளற்ற சொற்களைப் பெருக்கி எவ்வெவற்றையோ சொல்லிக்கொண் டிருக்கிறது. என்னுடைய பேச்சைக் கேட்டும் செயலைக் கண்டும் மகிழ்ந்த மனம் இப்போது எதனாலும் மகிழவில்லை; எதனாலும் அமைதி பெறவில்லை ; எதையாவது எண்ணு கிறதோ, அல்லது எண்ணம் • என்பதும் இல்லையோ, அறியக்கூடவில்லை.

தெருவில் திரிந்த காலம் போயிற்று ; கண்டோர் வருந்த அங்கும் இங்கும் அலைந்த காலம் போயிற்று. இரவும் பகலும் பெருமுழக்கம் செய்த காலமும் போயிற்று. இன்று அந்த உடலுக்கும் சோர்வு வந்துவிட்டது இருண்டதோர் அறையில் ஒரு மூலையில் குந்தித் தலை குனிந்தபடியே மணிக் கணக்காக கழிகிறது. நள்ளிரவில் எழுந்து பார்த்தாலும் பாட்டியாரை அதே நிலையில் காண

லாம். படுத்து உறங்கிப் பல வாரங்கள்—மாதங்களும் ஆகி விட்டன. பித்தர்நிலையிலும் நாளடைவில் ஒருவகை அமைதி உண்டு என்று தெரிகிறது.

பலர் பலவாறு பேசிக்கொள்கிறார்கள். சிலர் ஊழ்வினை என்கிறார்கள். அதில் எனக்கும் கருத்து வேறுபாடு இல்லை. நான் நினைக்கும் ஊழ் பெரியது; வலியது; சிறந்தது. ஆனால் அவர்கள் கூறும் ஊழோ சிறியது; மெலியது; இழிந்தது. போன பிறவியில் யாரையோ இப்படி இரவும் பகலும் உட்காரவைத்து உறக்கமும் இல்லாமல் இந்த அம்மையார் வதைத்தாராம்; அதனால் இந்தப் பிறவியில் வதைகிறாராம். இப்படி அவர்கள் எடுத்துரைக்கும்போது, என் வயிறெல்லாம் எரியும். இப்படியும் கடவுள் ஒறுக்கும் முறை உண்டா? உண்டானால் அந்தக் கடவுளும் கடவுளா? அதை ஒரு பிசாசு என்று அல்லவா கூற வேண்டும்? குற்றம் செய்தவரை ஒறுத்தல் எங்கும் காண்கிறோம். குற்றம் உணர்ந்து திருந்த வேண்டும் என்பதே ஒறுத்தலின் நோக்கம். செய்த குற்றத்தை உணர்த்தவும் உணர்த்தாமல், திருத்தும் வழியை அமைக்கவும் அமைக்காமல், ஒறுக்கும் முறை கடவுளின் ஆட்சியில்தான் இருக்குமா?

திருப்பதியில் நான் பிறப்பதற்காகச் செய்துகொண்ட வேண்டுகோளை - பிரார்த்தனையை - நிறைவேற்றவில்லை. அதனால் ஏழுமலையான் சினங்கொண்டு அறிவைக் கெடுத்தான் என்று சிலர் சொல்லும்போதும் என் உள்ளம் கொதிக்கும். மூட்டி வந்த அடுப்பை மீண்டும் சென்று எடுத்துவைப்பதால் அந்தக் கடவுளுக்கு என்ன மகிழ்ச்சி? உண்மையன்புக்கு மகிழாமல் வெறுஞ் சடங்கிற்கு மகிழ்வதாகக் கடவுளின்மேல் சிறுமை ஏற்றி வெகுளியும் ஏற்றிப் பழிக்கலாமா என எண்ணினேன். ஏழுமலையான் அருள் கொண்டு செய்த செயல்களை எண்ணி வியந்தேன்.

நண்பர் ஒருவர் மட்டும் ஒருநாள் வந்து கண்டு உண்மையை அஞ்சாமல் எடுத்துரைத்தார். அவர் பொதுவுடைமைக் கொள்கை உடையவர். எந்நேரமும் புது உலகத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருப்பார். பாட்டியார் புகையிலை அபின் முதலிய தூண்டுப் பொருள்களை உட்கொண்டது பழக்கமோ என்று கேட்டார். “அபின் முதலியவற்றை இந்தக் குடும்பத்தில் கேட்கலாமா ?” என்றேன். பிறகு, “ புகையிலையை உட்கொள்ளாதவர் ஒருவரும் இல்லை. என்னை ஆராய்ந்து பார்த்தாலும் தெரியும். எனக்குப் பீடி சிகரெட் முதலியவற்றைக் கண்டாலும் ஆகாது. ஆனால் நானும் அவற்றின் பயனை உட்கொள்கிறேன். எப்படி என்று கேட்பீர்கள். புகைவண்டியிலே ஏறிப்போகும்போது என் பெட்டியில் எத்தனையோ பேர் புகை பிடிக்கிறார்கள். அவர்கள் விடும் புகையில் ஒரு பங்கு என் மூக்கின் வழியாக இரத்தத்தில் கலக்கவில்லையா ? காசு பணம் செலவில்லாமல் நானும் புகையிலையின் பயனை அடையவில்லையா ? சினிமாவிற்குப் போய்ப் பார்க்கும்போதும் என்னைச் சுற்றிலும் எத்தனையோ பேர் எனக்கு இந்த உதவி செய்கிறார்கள். நெருங்கிப் பழகும் நண்பர்களும் செய்கிறார்கள் ” என்றேன். நண்பர் நகைத்துக்கொண்டே, “ நான் அந்த உதவியை இதுவரையில் செய்ததில்லை. ஆனால், நானும் உதவி பெற்றுக்கொண்டது உண்டு” என்றார். புகையிலையை நினைத்தவுடன் என் மூளை சுறுசுறுப்புப் பெற்று வேலை செய்தபடியால், “ நீங்கள் பேசும் பொதுவுடைமை வெறும் பேச்சு ; புகை பிடிக்கும் நண்பர்களே அதைச் செயலில் காட்டுகிறார்கள். தாங்கள் பிடிக்கும் புகையை அனைவர்க்கும் பரப்பிப் பொதுவாக்குகிறார்கள். அவர்களே தங்கள் பொருள் செலவாவதையும் பொருட்படுத்தாமல், பொதுவுடைமைக் கொள்கையைப் போற்றுகிறார்கள் ” என்றேன்.

பாட்டியார் வெற்றிலே போடும்போது புகையிலேயும் சேர்த்துக்கொள்வார்கள். இரண்டு இலேக்கும் உள்ள உறவு நம் நாடு அறிந்த உறவு அல்லவா ? இந்தப் பைத்தியத்திற்கு இதுதான் காரணம் என்ருர் நண்பர். என்ருல் நம்ப முடிய வில்லே. "புகையிலேயில் நஞ்சு இருப்பதுபோல், காப்பி முதலிய எல்லாவற்றிலும் உள்ளதே ! காப்பி முதலியவை உலகமெல்லாம் இருக்கின்றன ! உலகத்தார் எல்லாரும் பைத்தியக்காரரா !" எனக் கேட்டேன்.

"உடம்பின் அழுக்கு வெளிப்பட எத்தனேயோ சாய்க் கடைகள் உண்டு. அவைகள் படைப்பிலே அமைந்தவை கள். அழுக்கு மிகுந்துவிட்டால் புதிய சாய்க்கடையும் ஏற் படும். அதற்குத்தான் நோய் என்று பெயர். காய்ச்சல் முதலியவை சிலநாள் வரைக்கும் வந்து மறைந்துவிடும் சாய்க்கடைகள். கண்ணேய் முதலியவைகளும் அப்படியே. தீராத நோய்களான எலும்புருக்கி, காசம் முதலியவைகள் அழியாத சாய்க்கடைகள். குட்டமும் அப்படியே. கீல்வாயு முதலியனவும் அப்படியே. உடம்பு தளர்ந்த பிறகு ஏதாவ தொரு நிலேயான புதுச் சாய்க்கடை - புது நோய் - இருப் பதே நல்லதாகத் தெரிகிறது. இல்லேயாளுல் புகையிலே முதலியவற்றின் நஞ்சு தலேக்கு எட்டி மூளே நரம்புகளேத் தாக்கிப் பைத்தியமாக்கிவிடும். புகையிலேயும் காப்பியும் வழக்கமாக நாள்தோறும் வேலேசெய்து தூண்டிய இடம் மூளே தான். அதனுல்தான் சுறுசுறுப்பும், ஊக்கமும் உண் டாக்கும் பெருமை அவைகளுக்குக் கிடைத்துள்ளது. உடல் தளர்ந்த பிறகும் மூளேயைத் தாக்கி வேலே செய்கின்றன. அழுக்கும் நஞ்சும் அங்கே நிற்கின்றன. மூளே கெடுவதால் பைத்தியம் ஆகிறது. காலிலோ வயிற்றிலோ மார்பிலோ ஏதாவது நோய் தீராமல் நின்ருல் அழுக்கும் நஞ்சும் அங்கே நின்றுபோய்விடும். தலேக்கு ஏருமல் நின்றுவிட்டால்

பைத்தியம் வராது. சாகும் நிலைமையில் குடலில் பேதி முதலியவை இருந்தால் நல்ல நினைவு இருப்பது தெரிய வில்லையா ? அவர்கள் மூளை கெடாமல் நினைவு தவறாமல் பேசிக்கொண்டு சாகிறார்களே, அதற்கும் அதுதான் காரணம்" என்றார். நண்பர் அப்போது சொன்ன காரணம் பொருத்தமாகப் படவில்லை. நாளடைவில் மெல்ல மெல்ல நம்பிக்கை ஏற்பட்டுவருகிறது. எனக்கு அடிக்கடி வயிற்றுக் கோளாறும் கீல்வாயுவும் வருவதுபோல் தெரிவதால் என்னுடைய முதுமையில் பைத்தியம் பிடிக்காது என்னும் நம்பிக்கை இருக்கிறது.

நண்பர் இன்னும் ஒன்று கூறினார். "பைத்தியம் பிடித்தவருக்குக் கவலை என்பதே இல்லை. அந்தப் பைத்தியத்தைச் சுற்றியிருப்பவர்களுக்கே கவலை. இப்போது உங்கள் பாட்டிக்கு இன்பமும் இல்லை; துன்பமும் இல்லை. இரண்டும் அற்ற நடுநிலை இது. ஷேக்ஸ்பியர் எழுதிய ஒரு நாடகத்தில் லியர் என்னும் அரசனுக்குப் பைத்தியம் பிடிக்கிறது. அதைக் கண்ட மற்றோர் அரசன் பொறாமைப்படுகிறான். இப்படிப் பைத்தியம் பிடித்தால் என் கவலையெல்லாம் பறந்து போகுமே என்று பொறாமைப் படுகிறான்" என்று அந்த அடிகளை ஒப்புவித்தார். அதன் உண்மை மட்டும் எனக்கு அப்போதே தெளிவாகிவிட்டது.

நண்பர் தொடர்ந்து, "ஷேக்ஸ்பியர் போன்ற புலவர்களே வாழ்க்கையின் உண்மையைத் தெளிவாக எடுத்துக் காட்ட வல்லவர்கள். மற்றவர்கள் அங்கொன்றும் இங்கொன்றும் பார்க்கிறார்கள். அதனால் அடிப்படையான உண்மைகள் அவர்களுக்கு விளங்குவதில்லை. ஆனால் சிறந்த புலவர்கள் முழுப்பார்வை பார்க்கிறார்கள். எல்லாவற்றையும் ஒருசேர வைத்துப் பார்க்கிறார்கள். அவர்களுக்கு விளங்காத உண்மையே இல்லை" என்றார்.

சிறிது நேரம் கழித்து, நண்பர் என்னை நோக்கி, " புது உலகத்தில் பைத்தியத்திற்கு வீட்டில் இடம் இருக்காது. இப்போது வீட்டில் விடுவதால், ஒரு பைத்தியம் போய் வீடெல்லாம் பைத்தியக்காரராக மாறிவிடுகிருர்கள். நூறு குழந்தைகளை வைத்துக்கொண்டு ஒருவர் காப்பாற்றலாம். ஆனல் ஒரு பைத்தியத்தை வைத்துக்கொண்டு நூறு பேர் காப்பாற்ற முடியாது. பைத்தியத்துக்குத் தொண்டு செய்வதைப் போல் களைப்பான வேலை இல்லை. அதனல் நம்முடைய மூளையும் கெட்டுக் கோபமும் கொதிப்பும் பொங்கும். நம் உடம்பும் நாளடைவில் கெடும். பொதுவுடைமை அரசாங்கமானல் இப்படி வீட்டில் விட்டிருக்க மாட்டார்கள். இப்போதுள்ள பைத்தியக்கார நிலையம் யாரோ ஒரு சிலருக்குத்தான் பயன்படுகிறது. செல்வர் சிலர்க்குத்தான் அங்கே இடம் உண்டு. ஏழைகள் போனலும் பயனில்லை; போவதற்கு இடமுமில்லை. எதிர்காலத்தில் தொடக்கத்திலேயே பைத்தியத்தைக் குணப்படுத்த வழி தேடுவார்கள். முடியாவிட்டால், அமைதியாக உயிரைப் போக்கிவிடுவார்கள் " என்ருர்.

நான் திடுக்கிட்டுக் கலங்கி, " அப்படிப்பட்ட அரசியல் வேண்டாம்; அது பொதுவுடைமையா யிருந்தாலும் வேண்டாம். என்ன கொடுமை! நன்றி கெட்ட உலகம்!" என்றேன்.

" உங்கள் பக்கத்து வீட்டில் ஒரு பைத்தியம் இருந்து இரவும் பகலும் தொல்லை கொடுத்தால் என்ன செய்வீர்கள் ?"

" அவர்கள் எங்களைத் திட்டிக்கொண்டிருப்பது போல், நாங்கள் அவர்களைத் திட்டிக்கொண்டிருப்போம்."

" அப்போது துனபம், இடையூறு முதலியவை எவ்வளவு என்று உணர்வீர்கள் அல்லவா ?"

" ஏன்? இப்போதுகூட உணர்கிறோம். நாங்கள் படாததா ?"

" ஆகையால் உங்கள் பாட்டியாரால் அக்கம்பக்கத்தாருக்கும் உங்களுக்கும் எவ்வளவு துன்பம் ?"

" அதற்கு என்ன செய்யலாம் ?"

" நீங்கள் வேண்டுமானால் படலாம். காரணம் இல்லாமல் மற்றவர்கள் படுவது ஏன் ? சமூகத்திற்குத் தீங்கு செய்வது பெரிய குற்றம் அல்லவா ?"

" உண்மைதான்."

" உங்கள் பாட்டியார் செய்த நன்றியை மறக்கவேண்டாம். ஆனால், சமூகம் உங்களுக்குச் செய்த நன்றியை மறக்கலாமா ? சமூகத்தில் நன்றியில்லாமல் ஒரு குடும்பமும் தனி ஒருவனும் வாழ முடியாது என்பதை உங்களுக்குப் பலமுறை சொல்லியிருக்கிறேன்."

" நினைவு இருக்கிறது."

" இப்போது சமூகத்திற்கு தீங்கு செய்யலாமா ? இதைவிடப் பெரிய பாவம் வேறு உண்டா ?"

" அப்படியா ?"

" ஆமாம். நீங்கள் உங்கள் முயற்சியையெல்லாம் விழலுக்கு இறைத்த நீராய் வீணாக்குகிறீர்கள். உங்கள் தொண்டினால் - உதவியினால் - பாட்டியாருக்கு எள்ளளவாவது நன்மை உண்டா ? இன்ப துன்பம் உண்டா ?"

" அறிவு கலங்கிய போது இன்பம் ஏது ?"

" நீங்கள் செய்வது பயனற்ற முயற்சிதானே ? கல்லுக்கும் கட்டைக்கும் நீங்கள் செய்யும் உதவியும் இந்த உதவியும் ஒன்றுதானே !"

" அப்படித்தான் இருக்கிறது."

" இப்போது நீங்கள் ஏன் செய்கிறீர்கள் என்று உங்களுக்கே தெரியாது. நான் வேண்டுமானல் சொல்கிறேன். பாட்டியாரைக் காப்பாற்ற வேண்டும் என்று ஓர் எண்ணம் ; ஆனல் பாட்டியார் போய் நெடுநாள் ஆய்விட்டது. அவர் அணிந்திருந்த கந்தல்சொக்காய் போன்றது இந்த உடம்பு. இதைக் காப்பாற்றுகிறீர்கள். இது உங்கள் மூட நம்பிக்கை. ஆனல் இது உங்களுக்கு அமைதியும் திருப்தியும் அளிக்கிறது. அவ்வளவு தான்."

" இருந்தாலும் அமைதியாக உயிரைப் போக்கச் சொன்னீர்களே !"

" நான் உங்களை இப்போது செய்யச் சொல்லவில்லை. இப்போது செய்தால் உலகம் பழிக்கும். உலகம் ஒன்றுபட்டு உண்மை உணர்ந்து அப்படிச் செய்யும் காலம் வரும் என்று சொன்னேன். அப்போது நீங்களும் உங்கள் மூட நம்பிக்கையும் தடுக்கவே முடியாது."

" அப்போது கூட உயிரைப் போக்க முடியுமா ?"

" அதற்குத்தானே அரசாங்கம் அமைப்பது ? தனி மனிதன் கொலை செய்யக் கூச வேண்டும். அரசாங்கம் கூடி நன்மைக்காகக் கொலை செய்யலாம். களை எடுப்பது போன்றது அந்தச் செயல். திருவள்ளுவர் கூறவில்லையா ?"

" திருவள்ளுவர் பைத்தியத்தைப் பற்றி ஒன்றும் கூறவில்லையே !"

" பைத்தியம் என்று குறிப்பிடவில்லை. அன்பு இல்லாதவன் பிணம் என்ருர். பண்பு இல்லாதவன் மரம் என்ருர். என்ன பொருள் ? அரசாங்கம, பிணத்தையும் மரத்தையும் உயிர் வாழும் மக்களுக்கு இடையூருக வைத்திருக்கக்

கூடாது ; புதைத்துவிட வேண்டும், கொளுத்திவிட வேண்டும் - இதுதான் பொருள். திருவள்ளுவர் மூளை கெடாத பைத்தியத்தையும் அப்படித்தான் சொல்லுகிறார். மூட நம்பிக்கை பிடித்தவர்களை அவர் தொத்துநோய் என்கிறார். 'ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர் போஒம் அளவுமோர் நோய்.' தொத்துநோயைப் போக்க வேண்டியது அரசாங்கத்தின் கடமை அல்லவா ? ஆகையால் இவற்றை விடப் பயனற்ற முழுப்பைத்தியத்தைக் குணப்படுத்தாமல் வைத்திருக்க இடங்கொடுக்க மாட்டார். திருவள்ளுவர் அமைச்சராக வந்தால் அப்படித்தான் செய்வார்" என்றார்.

நண்பருடைய நீண்ட பேச்சைக் கேட்டுச் சொக்கிப் போனேன். பைத்தியக்கார நிலையத்தில் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டு அடிக்கடி போய்ப் பார்த்துக்கொண்டிருக்கலாம் என்று எண்ணி நண்பரை வழி கேட்டேன்.

" மாதம் முப்பது ரூபாய்க்குக் குறையாமல் கட்டினால் தான் சேர்த்துக்கொள்வார்கள் " என்றார். வேறு பேச்சின்றி வாயை மூடிக் கிடந்தேன். நண்பரோ, " இப்படித்தான் பட வேண்டும். பொதுவுடைமை வரும் வரையில் எவ்வளவோ துன்பம் பட்டாக வேண்டும். அவற்றில் இதுவும் ஒன்று. வேறு என்ன செய்வது ?" என்று சொல்லிப் புறப்பட்டார்.

" அந்தக் கிழவிக்குப் பண ஆசை, நில ஆசை உண்டு. அவற்றைப் பேரன்கையில் கொடுத்துவிட்டதால் மனம் கெட்டுவிட்டது " என்று சிலர் சொன்னார்கள். அது பாட்டியாரின் மனமும் வாழ்வும் தெரியாதவர்கள் கூறிய சொல். பேரனைப் பற்றி அவர் கொண்டிருந்த கவலையை நோக்க, நிலத்தைப் பற்றி அவர்க்குக் கவலையே இருந்ததில்லை எனலாம். பேரன்மேல் இருந்த பற்றுக் கடல் போன்றது என்றால் மண்ணிலும் பொன்னிலும் இருந்த பற்று நீர்த்துளியளவு

எனலாம். அதனால் மனம் கெட்டது என்பது பொய். அப்படி இருந்தால், ஒரு நாளாவது பாட்டியாரின் வாய் நிலத்தைப் பற்றியும் பணத்தைப் பற்றியும் பிதற்றலாம் அல்லவா ? ஒரு நாளும் அந்த வாய் அவற்றைப் பற்றிப் பேசியதே இல்லை.

நண்பரின் பேச்சைக் கேட்டபோது எங்கள் குடும்பம் ஒரு சிறைச்சாலை போல் இருப்பதாக உணர்ந்தேன். அந்தச் சிறைக்குளளே பாட்டியாரின் உடலும் அடைக்கப்பட்டிருந் தது. என் மனமும் அடைபட்டிருந்தது. பாட்டியாரின் உடலுக்கு அந்த மண்சுவர்கள் தடையாக இருந்தன. என் மனத்திற்கோ காணுமற்போன பழங்கதை முதல் பைத்தியம் பிடித்ததற்குச் சொல்லப்படும் காரணம் வரையில் எல்லா எண்ணங்களும் தடைகளாக இருந்தன. பாட்டியாரோ சிறைக்குள் இருப்பதை உணராதபடி அறிவு கலங்கிவிட் டார். அவர் வாழ்க்கை டிக் டிக் டிக் என்ற ஒலியுடன் ஓடிக் கொண்டிருக்கும் கெடிகாரம் ; ஆனால் முள் அசைவதில்லை ; மணி காட்டுவதில்லை. அதனால் சிறைத் துன்பம் பாட்டி யாருக்குத் தெரியாது. என் மனமோ ஓயாமல் உணர்ந்து துன்பப்பட்டுவந்தது. விடுதலை அறியாத சிறை என்று தான் சொல்ல வேண்டும். ஆனால் விடுதலை வேட்கைக்கோ அளவில்லை.

பாட்டியார் பலநாள் மறவாமல் அடிக்கடி பேசியது வெற்றிலையைப் பற்றியும் புகையிலையைப் பற்றியுமே ஆகும். உணவு உண்டதும், “ வெற்றிலையும் பாக்கும் எடுத்துவர இவ்வளவு நேரமா ?” என்பார். இந்த வெற்றிலைப் பித்தை மாற்ற எவ்வளவு முயன்றும் பயனில்லாமல் போயிற்று. வெற்றிலையே தராமல் நிறுத்தியும் ஆயிற்று. துப்பும் இடம் தெரியாமல் கண்ட இடமெல்லாம் துப்பியதாலும், வெற்றிலை கொடுத்தாலும் அமைந்திடாமல் அலைந்திட்டதாலும் அதை

நிறுத்த நேர்ந்தது. கண்பார்வை அடியோடு போய்விட்ட பிறகே இவ்வாறு நிறுத்தலாயிற்று. ஆயினும் அப்போது கூடப் பக்கத்தில் கிடைத்த காகிதத்துண்டு முதலியவற்றையோ, அவை கிடைக்காதபோது தன் புடைவையைக் கிழித்துத் துண்டாக்கியோ வாயிலிட்டுக் குதப்பிக்கொண்டிருப்பார். வெற்றிலைப் பித்து அவ்வளவு மிகுதியாக நிலைத்திருந்தது. அறிவோடிருந்தபோது காலையில் வெற்றிலை புகையிலை இரண்டு தெய்வத்தையும் தொழுது எழுவதும், இரவில் அவற்றை வணங்கியே உறங்குவதும் வழக்கமாகக் கொண்ட வாழ்க்கை அவர் வாழ்க்கை. ஆகையால் அவை அவ்வளவு ஆழமாகப் பதிந்திருந்தன. பித்துற்றபோதும் அந்த நினைவு அப்படியே இருந்தது.

வாழ்க்கையில் பல நிகழ்ச்சிகள் மறந்து அழிந்தபோதிலும் அந்தப் பித்தர்மூளையில் ஆழ்ந்த நிகழ்ச்சிகள் சில அழியாமல் இருக்கின்றன. கதிரவன்ஒளியும் அந்த ஒளி படரும் நிகழ்கால உலகமும் கண்முன் தோன்ருப் பேறு அவருக்கு இருந்தது. ஆதலால் கழிந்த சில நிகழ்ச்சிகள் கண்முன் வந்து நின்றபோது, அவையே மெய்யாகவும் நாங்கள் கூறுவன எல்லாம் பொய்யாகவும் அவருக்குப் பட்டன.

திடீரென்று ஒருநாள் விடியற்காலையில் பாட்டுப் பாடி நீட்டி நீட்டி அழத்தொடங்கினர். நான் சென்று காரணம் என்ன என்று கேட்டேன். “இன்றைக்குத்தான் நான் தாலி அறுப்பது. நானும் வாழ்ந்து முடிந்து போச்சே......” என்று, “முடிந்துபோச்சே” என்பதையே பல்லவியாக வைத்துக்கொண்டு அழுகைப் பாட்டைத் தொடர்ந்தார். அந்த நாளை—என் பாட்டியார் தாலியறுத்த நாளை – நான் கற்பனையுலகிலேனும் காண முடியுமா என முயன்று பார்த்தேன். முடியவில்லை. ஆனல் தாலியறுப்புநாள் இந்த நாட்டுப் பெண்களுக்கு எவ்வளவு துன்பம் தருவது என

எண்ணிப் பார்த்து நெஞ்சம் குழைந்தேன். மற்றொரு நாள் அவ்வாறு அழுதுகொண்டிருந்த போது கேட்டதற்கு, "எங்கள் அம்மா செத்துப் போய்விட்டார்களே ; இன்றைக்கு மூன்று நாள் ஆகிவிட்டதே" என்று அழுதார்.

அழுகைப் பாட்டே அல்லாமல் நந்தனார் கீர்த்தனை முதலிய நல்ல பாட்டுக்களும் அவருக்குத் தெரியும். பித்துப் பிடித்த பிறகும் பலமுறை அவற்றைக் கேட்டுக் கேட்டு மகிழ்ந்திருக்கிறேன். ஓர் எழுத்தும் தெரியாத அந்த அம்மையார், சுந்தரமூர்த்தி நாயனார் பாடிய "பொன்னார் மேனியனே" என்னும் தேவாரப் பாடலை இசையோடு பாடுவார். "இதை எப்படிக் கற்றுக்கொண்டாய் ? அம்மா ?" என்று ஒரு நாள் கேட்டேன். "எங்கள் அண்ணா (தம் தந்தையார்) என்னை மடிமேல் தலை சாய்த்துப் படுக்கவைத்துக் கொண்டே கற்றுக்கொடுத்தார். அப்போது நான் சின்ன பெண். அண்ணாவுக்கு என்மேல்தான் ஆசை" என்றார். "தெய்வமே ! அன்பால் வளர்ந்து அன்புருவாய் வாழ்ந்து அன்பை வளர்த்த அம்மையாருக்குப் பித்தும் வர வேண்டுமா ?" என்று பெருமூச்சு விட்டேன். அவர் அடிக்கடி பாடும் அரைகுறையான பாட்டு ஒன்று. இலக்கணக் குறை உடையதேனும் பாட்டின் உயிர்ப் பண்பு முற்றிலும் உடையது.

**நாராயணா என்ற நல்ல மருந்திருக்க**
**வேறான வேர்மருந்து வேண்டுமோ...(?)**
**அம்மருந்தை நாடி நாவில் உரைப்பவர்க்குத்**
**தாழ்வுண்டோ நெஞ்சே தவிர்.**

இவ்வாறே அவ்வையார் பாடிய 'சாதியிரண்டொழிய' 'ஆண்டாண்டு தோறும்' முதலிய பல வெண்பாக்களையும் இசையோடு நிறுத்திப் பாடுவார்.

தம்முடைய இளமையிலும் முதுமையிலும் பலகால் செய்து பழகிய தொழில்களையும் அவர் மூளை அழித்து விட வில்லை. "ஏய், ஏய்......போகுதா, பார்" என்று கோழிமுதலிய வற்றை ஓட்டுவதுபோல் செய்து, அருகில் உள்ள எந்தப் பொருளையும் எடுத்து அந்தக் கற்பனைக் கோழிகளின்மேல் எறிவார். அந்தப் பொருள்கள் எதிரில் உள்ளவர்மேல் பட்டுத் துன்பம் தருவதும் உண்டு. நெல் முதலியவற்றை வெளியில் உலரவிட்டிருக்கும் எண்ணம் நள்ளிரவில் வந்து விட்டால், " மழை வந்துவிட்டது, வாருங்கள், வாருங்கள் " என்று அங்கும் இங்கும் அலைந்து சுவர்களில் முட்டிக் கொண்டு வருந்துவார். " இவ்வளவு கூலி போதாதா, போ'மா, போ " என்று எவருக்கோ சொல்லுவார். " சோறு கொதி வந்துவிட்டதா, பார் " என்று யாரையோ ஏவுவார். " குழம்பு தாளிக்க வேண்டுமே, குழந்தையையாவது பிடி ; நீயாவது போய்ப் பார் " என்று எந்தச் சமையலறையிலோ கற்பனைக் குழம்பு தாளிப்பார். " நீதான் போய்த் தாளிக்க வேண்டும் " என்று யாரேனும் சொன்னால், " நீ கையை வீசிக்கொண்டு திரி. நான் அழுகிற குழந்தையை வைத்துக் கொண்டு தாளிப்பேன " என்று வெகுள்வார். அது எந்தக் குழந்தையோ ? அந்தக் குழந்தையின் அழுகுரல் அவரு டைய செவிக்கு மட்டும் கேட்கும் போல் இருக்கிறது.

சில வேளைகளில் யாராவது நடந்துவரும் காலடி யொலி கேட்டதும், தம் காலிரண்டையும் நீட்டிக்கொண்டு " குழந் தையை என் காலில் போடு. அப்படியே தூங்கிவிடுவான் " என்பார். சிலவேளை, வெறுந்தரையைத் தட்டிக்கொடுத்து, " தூங்கப்பா தூங்கு. அம்மா அடித்தாளோ அழகான கையாலே — உன்னை — அத்தை அடித்தாளோ அன்பான கையாலே " என்று பாடிக்கொண்டிருப்பார். கண் அவிந்த வாழ்வில் கற்பனைக்கு அளவில்லை போலும் ! கண் கெட்ட

தோடு நின்று அறிவு கெடாமல் இருந்திருந்தால் அந்த மூளையின் கற்பனைகளுக்கு மில்டன், வீரராகவ முதலியார் முதலிய கவிகளும் தோற்றிருக்கக் கூடும்.

ஒருநாள் இரவு முன்னேரத்தில் நல்ல மழை விடாமல் பெய்துகொண் டிருந்தது. வீடெல்லாம் ஒழுகலாக இருந்தது. எது போனாலும் எது வந்தாலும் என் தூக்கம் மட்டும் நிற்காது. அது என்னை நெருக்கியது. படுக்கவே எங்கும் இடமில்லை. மழையின் ஒழுகலுக்கும் தூக்கத்திற்கும் சிறு போர் நடந்தது. தூக்கம் வென்றது ; ஒழுகல் தோற்றது. மேசைமேல் படுத்தபடியே நெல் மூட்டையின் மேல் காலை நீட்டிச் சாய்ந்தேன். உயர்ந்த அன்னை — கவலைக்குப் பெரு மருந்தான உயிரன்னை — உறக்கம் என்னும் அன்னை — எனக்கு விடுதலை கொடுக்க வந்தாள் ; என்னை வாழ்வித்தாள். வீட்டை மறந்தேன், மழையை மறந்தேன், ஒழுகலை மறந்தேன், குடும்பக் கவலையை மறந்தேன், பாட்டியாரின் பித்தை மறந்தேன். என் புகழ்ப் பித்தை மறந்தேன், ஏடுகளை மறந்தேன், எல்லாம் மறந்தேன். உழைப்பாளிகளுக்கே கிட்டுவதாய் உயர்ந்த அரசர்க்கும் அரியதாய உள்ள அந்த இன்ப உலகத்தில் — ஏழை என்றும் செல்வர் என்றும் வேறுபாடற்ற அந்த உரிமை உலகத்தில் — சாதி என்றும் சமயம் என்றும் குழப்பமற்ற அந்த அமைதி உலகத்தில் — உயர்ந்தோர் என்றும் தாழ்ந்தோர் என்றும் பூசல் அற்ற அந்தப் புனித உலகத்தில் — அறிஞர் என்றும் அறிவிலார் என்றும் பிணக்கு அற்ற அந்தப் பேருலகத்தில் என் சிறுமை வாழ்வை மறந்து இறுமாந்து கிடந்தேன் ; உறக்க உலகத்தில் விடுதலை எய்தி வாழ்ந்திருந்தேன்.

மணி இரண்டு அடித்தது கேட்டேன். மேசை மேல் படுத்துக் கிடத்தலை உணர்ந்து எழுந்தேன். மழை பெய்தது என்பதை நினைந்தேன். பெய்து விட்டிருப்பதை

உணர்ந்தேன். தெருக்கதவைத் திறந்து வெளியே சென்றேன். திண்ணைமீது நாய் ஒன்று உட்கார்ந்தபடியே தலை நிமிர்ந்து இருந்தது. அந்த நாய் எந்தச் சீர்திருத்தத்தைப் பற்றியோ எண்ணிக்கொண்டு தன் வாலின் கோணலை மறந்திருந்தது. எதிர்வீட்டில் எண்பது வயதான கணவனும் எழுபது வயதான மனைவியும் கால் நீட்டி உட்கார்ந்தபடியே வெற்றிலை போட்டுத் துப்பிக்கொண்டிருந்தார்கள். நிலா ஒரு சிறிது தோன்றி மறுபடியும் கருமுகிலிடையே மறையப் பார்த்தது. தெருத் தென்னை மரத்திலிருந்து தேங்காய் ஒன்று தொப்பென்று விழுந்தது. அமைதியாயிருந்த நாய் எழுந்து ஓடிக் குலைத்துக் குலைத்து அலைந்தது. நான் மெல்லச் சென்று அந்தத் தேங்காயை எடுத்துக்கொண்டு தெருக் கதவைத் தாழிட்டு உள்ளே வைக்கச் சென்றேன். அந்தப் பித்தர் அறையில் "அப்பா! பையா! எங்கேடா போய்விட்டாய்? அப்பா! திருவேங்கடம்! திருவேங்கடம்!" என்று ஒரே மூச்சாகப் பாட்டியார் அலறுவதைக் கேட்டேன். "என்ன அம்மா, என்ன'மா! ஏன்'மா கூப்பிடுகிருய்?" என்று உரத்த குரலில் கேட்டேன். இங்கும் அங்கும் ஓடிச் சுவரில் முட்டிக்கொண்டு தலையெல்லாம் அடிபடுவதை விளக்கெடுத்துக் கண்டேன். மீண்டும் கேட்டேன். "ஏன்'மா கூப்பிடுகிருய்? என்ன'மா? சொல்லம்மா" என்றேன். "வாத்தியாரே! வாத்தியாரே! பையன் எங்கே ஐயா! அப்பொவே சொன்னேனே ஐயா! வாத்தியார் என்று நம்பி அனுப்பினேனே ஐயா! தவமிருந்து பெற்றேனே ஐயா! வாத்தியாரே வாத்தியாரே!" என்று மறுபடியும் அலறினர். என் கண்ணீரைத் துடைத்துக்கொண்டே அவர் தலையிலிருந்து வடிந்த செந்நீரையும் துடைக்கலானேன்.

# தேங்காய்த் துண்டுகள்

"மாலை நேரத்தில் குடித்துவிட்டுச் சாலை ஓரத்தில் விழுந்து கிடப்பவர்களைப் பார்த்திருக்கிறோம். ஆனால் இது என்ன கொடுமை! பகல் ஒரு மணிக்கு நல்ல வெயிலில் தார் வெந்து உருகும் வெப்பத்தில் இந்தச் சாலை ஓரத்தில் இப்படி ஒருவன் விழுந்து கிடக்கிறானே" என்று எண்ணிக்கொண்டே அந்த மாரியம்மன்கோயிலை அணுகி நடந்து போய்க்கொண்டிருந்தேன். வெளியூர்களில் கள் சாராயக் கடைகளை மூடிவிட்ட பிறகு, அங்கே உள்ள குடிகாரர் சிலர் அடிக்கடி சென்னைக்குப புறப்பட்டு வந்து, ஏதோ வேலை இருப்பது போல் நகரத்தைச் சுற்றித் திரிந்து, ஆசை தீரக் குடித்து மயங்கியிருந்து, பிறகு ஊருக்குத் திரும்புவது எனக்கு நன்றாகத் தெரியும். எங்கள் ஊரிலிருந்தே பலர் அப்படிப் புறப்பட்டு வந்து சென்னையில் குடித்துவிட்டுப் போவது தெரியும். ஒரு முறை வீட்டுக்கு வந்து என்னை பார்த்துவிட்டு, நகரத்தில் பல வேலை இருப்பதாகச் சொல்லிவிட்டுப் போய்விடுவார்கள். உணவுக்கு ஒரு வேளையாவது வருமாறு அழைத்தாலும் வருவதில்லை. அவர்களுக்கு விருப்பமான விருந்து கள்ளுக் கடைகளிலும் சாராயக் கடைகளிலும் கிடைக்கும்போது, வெந்த அரிசிச் சோற்றைத் தேடியா வந்து காத்திருப்பார்கள்? நாட்டுப்புறத்தில் மூலை முடுக்குகளில் காய்ச்சும் திருட்டுச் சாராயம் போதாது என்று இந்தக் கடைச் சரக்கை நாடி வருகிறவர்கள், அதையும் விட்டு நல்ல அரிசிச் சோற்றையும் பொருட்படுத்தாமல் இந்தப் பங்கீட்டு அரிசிச் சோற்றை—ஈரத்தோடு நெடுநாள் இருந்து கெட்டு அழுகிப் பல நிறம் பெற்று விளங்கும் அரிசியால்

சமைத்த சோற்றையா நாடி வருவார்கள் என்று நானும் வற்புறுத்தாமல் விட்டுவிடுவேன். ஆனால் மின்சாரவண்டி வரும் வேளையில் தண்டவாளப் பாலத்தின்மேல் நடந்து வண்டியில் அகப்பட்டுக்கொண்டு மடிந்த இரண்டு பிணங்களை ஒருநாள் காண நேர்ந்தது. அவர்களுக்குமுன்னே நடந்துவந்த சிலர் அவர்களைக் குடிகாரர் என்று அறிந்து அங்கே நடந்து போக வேண்டாம் என்று சொல்லித் தடுத்தும் கேட்கவில்லையாம். அந்தக் குடிவெறியில் தள்ளாடி நடந்து மின்சார வண்டிக்குப் பலியானார்களே என்று அன்று என நெஞ்சம் மிக வருந்தியபோது, போக்கு வரவு மிகுந்த சென்னையில்தான் கள் சாராயக் கடைகளை முதலில் மூட வேண்டும் என்று உணர்ந்தேன்.

இந்த மாரியம்மன் கோயிலருகே சாலை ஓரத்தில் பகல் ஒரு மணி வெயிலில் படுத்துச் சுருண்டிருந்த உடம்பைக் கண்டபோதும் இந்த எண்ணமே உண்டானது. நடுப்பகலிலே இப்படிக் குடிக்கின்றவன் பொழுது போனால் எவ்வளவு குடிப்பான் என்று சிறிது வெறுப்போடு எண்ணிக்கொண்டே நடந்தேன். அவனைப் பார்த்துக்கொண்டே இளைஞர் இருவர் நின்றுகொண்டிருந்தார்கள். என்ன நிலைமை என்றுதான் பார்க்கலாமே என்று நானும் அவர்கள் இருந்த பக்கமாக நடந்து சென்றேன்.

“ குடிகாரனா ?” என்று அவர்களைப் பார்த்துக் கேட்டேன்.

“ இல்லைங்'க ” என்றார் ஒருவர்.

“ வேறு என்ன ? காக்கைவலிப்பா ?” என்றேன்.

“ அதுவும் இல்லீங்'க. காக்கைவலிப்பாக இருந்தால் இப்படி மூச்சுப் பேச்சு இல்லாமல் சும்மா விழுந்து கிடப்பானா ?” என்றார் மற்றொருவர்.

அவனுக்கு வயது இருபது இருக்கலாம். நல்ல கட்டான உடல் இருந்தது. ஆனால் அழுக்கேறிய ஆடையும் வாடிய முகமும் கண்டபோது, வேறு நோயாக இருக்க முடியுமா என்று எண்ணிப் பார்த்தேன். தீய வழியில் நடந்து பெற்ற விபசார நோயாக (மேகம் முதலிய நோயாக) இருந்து உயிருக்கே உலை வைக்கும் அளவுக்கு முற்றியிருக்கலாம் என்றும், இந்தக் காலத்து இளைஞர்கள் மிகவும் கெட்டுப்போனவர்கள் என்றும் எண்ணினேன். " சரி, கர்ம வினை, நாம் என்ன செய்ய முடியும் ?" என்று ஒருவகை வெறுப்போடு நடக்கத் தொடங்கினேன்.

அதற்குள் யாரோ தண்ணீர் கொண்டுவந்து முகத்தில் தெளிக்கவே, அவன் " வேலா, வேலா " என்று ஆழ்ந்த குரலில் இரண்டு முறை சொன்னான். இதைக் கேட்டதும் காலெடுத்துச் சில அடி தொலைவு நடந்து சென்ற நான் அந்த இடத்திலேயே நின்றேன். அப்போது அந்த இடத்தில் என்னைப் போல் வழிப்போக்கர் ஒருவர் எட்டிப்பார்த்து, " இது என்ன ஐயா ! பாசாங்கு, வெறும் பாசாங்கு ; வாய் திறந்து வேலா வேலா என்று கடவுள் பெயரைச் சொல்கிறானே ! நான் இந்த மாதிரிப் பாசாங்குப் பிச்சைக்காரர் எவ்வளவோ பேரைப் பார்த்திருக்கிறேன். நேற்றுக் குழந்தை பெற்றுவிட்டு, இன்றைக்குப் பத்து மாதக் கர்ப்பவதிபோல் பாசாங்கு செய்து பிச்சை கேட்பதைப் பார்த்ததில்லையா ?" என்றார். உடனே அங்கிருந்த மற்றொருவர், " இதுதான் ஐயா பட்டணம் ! போகிறவர்கள் சும்மா போகக் கூடாதா ? எட்டிப் பார்த்தவுடன் பாசாங்கு தெரிந்துவிடுமா ? அவரவர்கள் வயிற்றுக்கு இல்லாமல் பட்டினியால் செத்தால் தெரியும் " என்றார்.

' பட்டினி ' என்ற சொல்லைக் கேட்டவுடன் எனக்கு இரக்கம் தோன்றியது. ஏதாவது வாங்கித் தரச் சொல்ல

லாம் என்று சட்டைப்பையில் கை இட்டுக் காசு எடுத்தேன். அதற்குள் ஒருவர்—கல்லூரி மாணவன் என்று அப்பால் தெரிந்துகொண்டேன்—ஒரு கையில் காப்பியும் மற்றொரு கையில் இரண்டு வாழைப்பழமும் கொண்டு வருவதைக் கண்டேன். என்ன நடக்கிறது, பொறுத்துத்தான் பார்ப்போம் என்று திரும்பி வந்து எட்டிப் பார்த்தேன். அதற்குள் அவனைச் சுற்றிப் பத்துப் பேருக்குமேல் நின்று கொண்டிருந்தார்கள்.

காப்பி குடிக்கச் சொல்வதற்கு அவனை அசைத்துப் பார்த்தார்கள் ; கூப்பிட்டுப் பார்த்தார்கள். ஒவ்வொரு வேளையில் மெல்லிய குரலில் ஏதோ ஒலி வந்தது. ஆனல் கண் திறக்கவில்லை. தண்ணீரும் கையுமாக நின்ற ஓர் ஆள் மறுபடியும் அவன் முகத்தில் தண்ணீரைத் தெளித்து வாயைத் திறந்து கொஞ்சம் தண்ணீர் உள்ளே விட்டார். மெல்லக் கண் திறந்து பார்க்கும் காட்சியைக் கண்டோம். உடனே ஒரு மாணவர் எழுப்பி உட்காரவைத்தார். இன்னொருவர் கையில் இருந்த காப்பியை நீட்டினர். அந்தக் காப்பியைக் கண்டதும, மயக்கத்திலிருந்த அவனுடைய கைகள் ஒரே ஆவலாக அந்தக் காப்பிக் குவளையை இழுத்து வாயில் வைத்துக்கொண்டன. “சூடு, சூடு, பார்த்து, பார்த்து” என்று எதிரிலிருந்தவர் சொல்வதற்குள காப்பி முழுதும் எப்படியோ வாயினுள் சென்றுவிட்டது. அப்போது அவனுடைய கண்களில் புலப்பட்ட ஆவலையும் வேட்கையையும் நான் எப்போதுமே கண்டதில்லை. அந்தக் கண்கள் காப்பியையும் குவளையையும் சேர்த்து வாய்க்கும் கொடுக்காமல், தாங்களே விழுங்கிவிடுவனபோல் அந்தப் பார்வை இருந்தது. உடனே அவனுடைய முகத்தில் தோன்றிய மாறுதல்தான் வியக்கத் தகுந்ததாக இருந்தது. இதுவரையில் அந்த முகத்தில் வாட்டம் இருந்தாலும் துன்பம்

இல்லை ; களைப்பு இருந்தாலும் பசிக்கொடுமை இல்லை. இப்போதோ, பல்லை இளித்துக்கொண்டு, தலையைத் தொங்க விட்டுக்கொண்டு, சாய்ந்து சாய்ந்து, ஏதோ சொன்னான். யார் காதிலும் அந்தச் சொற்கள் கேட்கவில்லை. தரையில் சாய்ந்துவிட விரும்பினான். வேண்டாம் என்று தடுத்து ஒருவர் மாரியம்மன் கோயில் சுவர் பக்கமாக நகரச்சொல்லி அந்தச் சுவரில் சாயச் செய்தார். அதற்குள் இன்னொருவர் மற்றொரு குவளைக் காப்பியும் ரொட்டித்துண்டும் வாங்கி வந்து நீட்டினார். அவனுடைய பசிக்கொடுமையால் உடனே அவைகளும் மறைந்தன. வாழைப் பழங்களும் உடனே மறைந்தன. ' அப்பாடா ' என்று அயர்ந்து சாய்ந்து, சுற்றிப் பார்த்து மருண்டு கண்ணீர் விட்டான். எல்லாருக்கும் இரக்கம் மிகுந்துவிட்டது.

" எந்த ஊர் அப்பா ?" என்றார் ஒருவர்.

" மதுரை " என்றான் சிறிது தெளிவான குரலில்.

" எங்கே வந்தாய் ?"

" பிழைக்கத்தான் ஐயா ! என் கதி...... !"

" போகட்டும் ; என்ன உடம்புக்கு ?"

" ஐந்து நாளாச்சு ஐயா " என்று சொல்லி வயிற்றை அடித்துக்கொண்டு கண்ணீர் கலங்கினான்.

உடனே கூட்டம் மெல்ல மெல்லக் கலையத் தொடங்கியது. நான்குபேர் நின்றார்கள்.

" எழுந்து நடக்க முடியுமா ?" என்று கேட்டேன்.

" இன்னும் கொஞ்ச நேரம் பொறுங்கள், சாமி " என்று கெஞ்சும் குரலில் சொல்லி முகத்து வியர்வையைத் துடைத்து, கால்களை நீட்டிக்கொண்டும் மடக்கிக்கொண்டும் இருந்தான்.

பிறகு அங்கிருந்த சிலரும் மெல்ல நகர்ந்தார்கள். காப்பி கொடுத்த மாணவர் மட்டும் அங்கே நின்றுகொண்டிருந்தார். பக்கத்திலிருந்த கல்லூரி மணி அடித்தது. அந்த மணி ஒலியைக் கேட்டதும், அவரும் திரும்பித் திரும்பிப் பார்த்தார். இறுதியில் அவரும் புறப்பட்டுப் போகவே, நான் மட்டும் அங்கே நின்றேன். அந்த இளைஞனுடைய உண்மையான நிலையைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று ஏதோ ஒருவகை வேட்கை என் மனத்திலிருந்து தூண்டியது. அதனால்தான் நான் புறப்பட முடியாமல் அங்கே நின்றுவிட்டேன்.

"எழ முடியுமா?" என்று மறுபடியும் அவனைக் கேட்டேன்.

"உடம்பு அசதியாக இருக்கிறது, சாமி" என்றான்.

"வீடு வரைக்கும் வந்தால் வயிறாரச் சாப்பிட்டு வரலாம்" என்று அழைத்தேன்.

"வீடு எங்கே? சொல்லுங்கள். கொஞ்சம் களைப்புத் தீர்ந்ததும் நானே வருவேன்" என்றான்.

"இவ்வளவு களைப்பு ஏற்பட்ட பிறகு நீ ஏன் இந்த வழியில் நடந்து வர வேண்டும்? அதுவும் நடுப்பகல் வெயிலில் இப்படித் தார்ச் சாலையில் நடந்து வரலாமா?" என்றேன்.

"இன்னும் கொஞ்சம் தூரம்தானே? இந்த மாரியம்மன் கோயிலுக்கு எப்படியாவது போய்ச் சேர்ந்து விடவேண்டும் என்று தள்ளாடிக்கொண்டே வந்தேனுங்க!" என்று சொல்லிவிட்டு அமைதி ஆனான். பிறகு கண்ணீர் கலங்கித் தன் அழுக்கு ஆடைகளால் கண்களைத் துடைத்துக்கொண்டான். ஏதோ உண்மைக் காரணம் இருக்க வேண்டும் என்று நானும் பொறுத்திருந்தேன்.

ஒரு பெருமூச்சு விட்டு, "நான் பிழைக்க மாட்டே னுங்க" என்று அழுதான். என்னாலான வரையில் தேறு தல் கூறினேன். சொந்த ஊரில் சாகாமல் இப்படிப் பட்டணத்தில் சாக வேண்டுமா" என்று விம்மி விம்மிச் சொன்னான். "அதனால்தான் இந்தக் கோயிலுக்கு வந்து உயிரை விடலாம் என்று வந்தேன்" என்று கலங்கிச் சொன்னான்.

"நீதான் திக்கற்றவன் ஆச்சே. உனக்கு எங்கே இறந் தால் என்ன? இந்தக் கோயில்மேல் பக்தி என்ன?" என்று மெல்லக் கேட்டேன்.

"பக்தி இல்லை, சாமி. என்னோடு வந்தவன் – எங்கள் ஊரான்–இங்கே அடிக்கடி வந்து தேங்காய்பழம் வைத்துப் பூசை செய்துவிட்டுப் போவது வழக்கம். அவன் வருவான். சாகும்போது அவனாவது பக்கத்திலிருந்து பார்த்துக் கொள்வான் என்றுதான் இங்கு வந்தேன்" என்றான்.

இதைக் கேட்டதும், இன்னும் பெரிய கதைகள் இருக் கும் என்று நம்பிப் பேச்சை நிறுத்தி, எழுந்து வீட்டுக்கு வருமாறு சொன்னேன். மெல்ல எழுந்தான். கால்கள் பின்னிக்கொள்ளும் நிலையில் தளர்ந்து அடி எடுத்துவைத்து நடந்துவந்தான். வழியில் உள்ள ஒரு பாலத்தின் சுவரின் மேலும் ஒரு வீட்டுத் திண்ணையின் மேலும் இருமுறை உட்கார்ந்து மூச்சுவிட்டு எப்படியோ வீடு வந்து சேர்ந்தான். சாப்பிட்டு முடியும் வரையில் ஒன்றும் கேட்பதில்லை என்று இருந்தேன். உண்ட பிறகு அவன்முகத்தில் களைப்பும் தெளிவும் கலந்து விளங்கின. திண்ணையின் கீழே மெல்லச் சாய்ந்தான். "சாமி! உங்களுக்கு எவ்வளவோ புண்ணியம்! கொஞ்சநேரம் இங்கே படுத்திருந்துவிட்டுப் போய்விடு வேன்" என்றான். இதுதான் வாய்ப்பு என்று நானும் என் ஐயம் தீரக் கேட்கத் தொடங்கினேன்.

"உங்கள் ஊரான் கோயிலுக்கு வருவதாகச் சொன்னுயே. அவனுக்கு என்ன வேலை? அவன் நாள்தோறும் கோயிலுக்கு வருகிருனு?" என்று பல கேள்விகள் கேட்டேன்.

"அவன் எப்படியாவது இரவு படுப்பதற்குமுன் ஒவ்வொரு நாளும இந்தக் கோயிலுக்கு வராமல் போவதில்லை. ஒருவேளை தவறிவிட்டாலும், அவன் இருக்கும் இடத்திற்குப் பக்கத்தில் உள்ள எந்தக் கோயிலுக்காவது போய்ப் பூசை செய்விட்டுப் படுத்துக்கொள்வான். அப்போதும் இந்தக் கோயில்மேல்தான் நினைவு இருக்கும்" என்று கேட்டதற்கெல்லாம் விடை கூறினன்.

இவ்வளவெல்லாம் சொல்லியும் அவனுடைய தொழிலையும பெயரையும் சொல்லாமல் மறைத்துவந்தான். அதனுல் அவற்றைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவலும எனக்கு மிகுதியாயிற்று. வற்புறுத்திக் கேட்டதன் மேல், தன்னைப் போலவே கூலி வேலைசெய்து பிழைப்பவன் என்றும், ஆனுல் தன்னைப்போல் காசு கிடைக்காமல் கூலி வேலை கிடைக்காமல் உணவு கிடைக்காமல் திண்டாடுவதே இல்லை என்றும், அவன் பெயர் வேலன் என்றும் தெரிவித்தான. பெயர் வேலன் என்று அறிந்ததும், மயங்கி விழுந்து கிடந்தபோது "வேலா வேலா" என்று அவன் வாய் பிதற்றியது நினைவிற்கு வந்தது. அவனுடைய நண்பனிடத்தில் எவ்வளவு நம்பிக்கை வைத்திருந்தால், உணர்விழந்த காலத்திலும அவன்பெயரைச் சொல்லிக் குழற முடியும என்றும், அப்படிப்பட்ட உண்மை நண்பன் நாள் தவருமல் பூசை செய்யும் நல்ல நிலைமையில் இருக்கும்போது இவன் மட்டும் ஏன் வாடவேண்டும் என்றும் நான் வியந்துகொண்டு அமைதியானேன். அதற்குள் அந்த இளைஞனை உறக்கம் ஆட்கொள்ள வந்ததை உணர்ந்தேன். சிறிது நேரத்தில் குறட்டை விட்டு உறங்கும் நிலைமை அடைந்தான்.

நான் எழுந்து போய் என் கடமைகளை முடித்துக் கொண்டு திரும்பி வந்து அந்தத் திண்ணைமேல் சமக்காளம் விரித்துப் படுத்துக்கொண்டு, அவனைப் பற்றியும் அந்த வேலனைப் பற்றியும், வேலன் தொழில் எதுவாக இருக்கும் என்பதைப் பற்றியும் எவ்வளவோ எண்ணிப் பார்த்தேன். உண்மை அறிய முடியாமல் மயங்கிக்கொண்டிருந்தேன். எப்படியாவது கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று துணிந்தேன். சிறிது நேரம் கழிந்தது.

திடீரென்று அவன் எழுந்து உட்கார்ந்து, "நீங்கள் இல்லாவிட்டால், நான் இன்றைக்குச் செத்தே போயிருப் பேன். என்னோடு வந்தவன் முனிசாமி என்று ஒருவன் அப்படித்தான் பட்டணத்து மண்ணுக்குப் பலியானான்" என்று பக்கத்திலிருந்த ஒரு கல்லையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். எழுந்த ஐயங்கள் தீர்வதற்கு முன்னே இன்னொரு முனிசாமி கதையும் புகுந்துவிட்டதே என்று எண்ணிக்கொண்டு, "அவனும் வேலனோடு வந்தானா? வேலனுக்குப் பணமும் சாப்பாடும் கிடைத்தபோது இந்த முனிசாமி மட்டும் ஏன் பட்டினியால் சாக வேண்டும்?" என்று கேட்டேன்.

"வேலன் தைரியம் எங்களுக்கு வராது. வேலன் பள்ளிக் கூடத்திலும் சில மாதம் படித்திருக்கிறான். நான் படிக்கவே இல்லை. முனிசாமி மூன்றாவது படித்து நின்றுவிட்டான். தவிர, வேலன் செய்வதெல்லாம் முனிசாமிக்குப் பிடிப்ப தில்லை. அது நல்லது அல்ல, பாவம் என்று முனிசாமி அடிக்கடி சொல்லுவான். அதனால் வேலனுக்குக் கோபம். அவன் முனிசாமிக்கு உதவி செய்வதே இல்லை. எனக்குக் கொடுக்கும் பணத்தில் கொஞ்சம் எடுத்து வேலனுக்குத் தெரியாமல் முனிசாமிக்குக் கொடுப்பேன். அவன் அதையும் வாங்க மாட்டான். வேலன் கொடுத்த காசு பாவக் காசு, அது

எனக்கு வேண்டாம், அதைவிட உயிரை விடலாம் என்று பிடிவாதமாய் வாங்க மறுத்துவிடுவான். அதனால் பல நாள் பட்டினியிருக்க வேண்டி ஏற்பட்டது. ஒருநாள் ரயிலில் வரும்போது தலை கொடுத்துவிட்டான். அதுவும எனக்குத் தெரியாது. வேலன்தான் அந்தப் பிணத்தைப் பார்த்ததாக இரண்டு நாள் கழித்துச் சொன்னான். எனக்காவது, அம்மாவும இல்லை, அப்பாவும் இல்லை. நான் செத்தால் அழுவாரும் இல்லை. பாவம், முனிசாமிக்கு அமமா இல்லாவிட்டாலும், அப்பா இருக்கிறார். அவர் ஏழை. இருந்தாலும் கேள்விப் பட்டால் என்ன பாடு படுவாரோ" என்று சொல்லிப் பல பல என்று கண்ணீர் விட்டான்.

இதுதான் நல்ல சமயம் என்று, நான் தேறுதல் சொல்வது போல், "நீ அவசரப்பட்டுப் பைத்தியக்காரனைப போல் உயிரைப் போக்கிக்கொளளாதே. என்னாலான உதவி செய்வேன். கடும்பசியாக இருக்கும்போதெல்லாம் இங்கே வந்து போ" என்று சொன்னேன்; வேலன் தொழில் என்ன என்று உண்மையை மறைக்காமல் சொல்லும்படி பலமுறை கேட்டேன். யாரிடமும் வெளிப்படுத்தமாட்டேன் என்றும், தீமை ஒன்றும் நேராமல் பார்த்துக்கொள்வேன் என்றும் உறுதி கூறியபிறகே அதைப் பற்றி வாய்திறந் தான். அப்போதும், நீண்ட முகவுரைக்குப் பிறகே சொல்லத் தொடங்கினான்.

"நீங்கள் யாருக்கும் சொல்லக் கூடாது, சாமி. சொன் னால் என் உயிருக்கும் முடிவுதான். முனிசாமி எங்காவது போலீசாரிடம் தன்னைப் பற்றிச் சொல்லிவிடுவானோ என்று அவன் பலநாள் பயப்பட்டான். அதனால் முனிசாமிமேல் சந்தேகமும் கொண்டான். ஆனால் முனிசாமி மிக நல்லவன்; பகையாளிக்கும் தீங்கு செய்யமாட்டான். வேலனும் நல்ல வன்தான். வேறு வழியில்லை என்றுதான் இந்தத் தொழில்

செய்கிறான். எனக்கு அதை நினைத்தாலும் பயமாக இருக்கிறது. ஒருநாள் ஒரு விலை யுயர்ந்த பேனாவைக் கொடுத்து வைத்திருக்கச் சொன்னான். அன்றெல்லாம் நான் வெளியே திரியாமல் ஒரு மூலையில் முடங்கியிருந்தேன். போலீஸாரைக் கண்டாலும் நடுக்கமாக இருந்தது. வேலன் தைரியம் வராது. யாருக்கும் சொல்லாதீர்கள், சாமி" என்று சொல்லி முடித்துக் கெஞ்சுவது போல் என் முகத்தைப் பார்த்தான். மறுபடியும் உறுதி கொடுத்தேன. இங்கும அங்கும் திரும்பிப் பார்த்தபடியே பேசினான்.

"அவன் பட்டணத்துக்கு வந்த நாலாம் நாளே ஒரு கூட்டத்தில் சேர்ந்துவிட்டான். அந்தக் கூட்டத்தில் ஐந்தாறு போக்கிரிகள் இருக்கிறார்கள். அவர்கள் எந்த நேரமும் சைனா பசாரிலிருந்து மூர்மார்க்கெட் வரையிலும் எங்காவது நின்றுகொண்டும் திரிந்துகொண்டும் இருப்பார்கள். சில வேளைகளில் பஸ் நிற்கும் இடங்களில் நிற்பார்கள். ஆட்கள் கூட்டமாகச் சேரும் இடங்களிலே அவர்கள் நடுவில் திரிந்து கொண்டிருப்பார்கள். வேலன் அவர்களோடு சேர்ந்துவிட்டான். எனக்கோ முனிசாமிக்கோ அது பிடிக்கவில்லை. ஆனால், நாங்கள் கூலியும் கிடைக்காமல் பட்டினி இருந்த போதெல்லாம் எங்களுக்குக் காப்பி பழம் எல்லாம் வாங்கிக் கொடுத்துக் காப்பாற்றினவன் அவன்தான். ஒருநாள் வேலனிடத்தில் பத்து ரூபாய் நோட்டு ஐந்து பார்த்தோம். யாரோ சட்டைப்பையில் பணப்பை (மணிபர்ஸ்) வைத்துக்கொண்டு போனதாகவும், அதை அந்த ஐந்தாறு பேரில் ஒருவன கத்தரித்து இன்னொருவன் கையில் கொடுத்ததாகவும், அது அப்படியே கை மாறி மாடர்ன்கபேயிலிருந்து சென்ட்ரல் ஸ்டேஷன் வரையில் வந்ததாகவும், அது வேலன் கைக்கு வந்தபோது, அதிலிருந்து ஐந்து நோட்டு எடுத்து வைத்துக்கொண்டதாகவும் சொன்னான். இதைக் கேட்டதும்

முனிசாமி, எங்கள்மேல் கோபத்தோடு புறப்பட்டான். வேலன் ஓடிப்போய் அவனுடைய இரண்டு கைகளையும் பிடித்துக்கொண்டு, போலீசாரிடம் சொல்லாதிருக்குமாறு கெஞ்சினன். இனிமேல் அந்தத் தொழில் செய்வதில்லை என்று வாக்குறுதி கொடுக்கும்படி முனிசாமி கேட்டான். வேலன் வாக்குறுதியும் கொடுத்தான். ஆனல் சொன்னபடி நிற்கவில்லை. ஒருநாள் உங்களைப் போல் ஒருவர் பணப்பை போய்விட்டதாகவும் இருநூறு ரூபாய் இழந்ததாகவும் அழுதுகொண்டே சைனபசாரில் சொன்னர். அதைக் கேட்டபோது முனிசாமி என்னைத் தனியே அழைத்துக் கொண்டுபோய், "வேலன் இப்படிப் பலரை அழவைத்துப் பாவம் தேடிக்கொள்கிருனே" என்ருன். வேலனை நான் தனியே ஒருநாள் உருக்கத்தோடு கேட்டேன். தான் ஒன்றும் செய்வதில்லை என்றும், மற்றவர்களுக்குத் துணையாக இருந்து திருடிய பொருள் கைமாறும்படி செய்வதாகவும் சொல்லிச் சத்தியம் செய்தான். முனிசாமி இறந்தபிறகு நான் வேலனை ஒன்றுமே கேட்பதில்லை. எப்படியாவது போகட்டும் என்று விட்டுவிட்டேன். ஆனல், நான் பட்டினி இருந்ததைப் பற்றியும் வருத்தப்படவில்லை. ஐந்து நாளாக அவனைப் பார்க்கவில்லை. இந்தக் கோயிலுக்கும் அவன் ஐந்து நாளாக வரவில்லை. வந்திருந்தால் எனக்குத் தெரியும். கிழக்கு இறவாணத்து மூலையில் கல்சந்தில் தேங்காய் கொஞ்சமாவது வைக்காமல் போகமாட்டான். ஐந்து நாளாக அங்கே தேங்காயும் இல்லை. சைனபசாரிலும், மூர்மார்க் கெட்டிலும் தேடினேன். எங்கும் கிடைக்க வில்லை. என்னலும் நடக்க முடியாதபோதுதான் இந்தக் கோயிலி லிருந்து உயிரை விட வந்தேன். இரவில் நேரம் கழித்து வந்தால் பார்க்க முடியும் என்று வந்தேன். கையில் காசு அகப்படாத காரணத்தால் தேங்காய் வாங்க முடியாமல் போய்விட்டதோ, அல்லது கூட்டாளிகள் துரத்திவிட்டார்

களோ, அல்லது போலீசார் பிடித்துச் சிறையில் வைத்து விட்டார்களோ, என்ன ஆனதோ பாவம்! தெரியவில்லை. என் மனத்தில் ஒரே கவலையாக இருக்கிறது. தூங்கிக் கொண்டே இருந்தேன். அதை நினைத்துத்தான் திடுக்கிட்டு எழுந்தேன்" என்றான்.

"என்றைக்கும் ஆபத்து, பிக்பாக்கட்" என்று சொல்லி முடிப்பதற்குள், அவன் எழுந்து என் இரண்டு கால்களையும் பிடித்துக்கொண்டு, "சாமி, சொல்லிவிடாதீர்கள்" என்று கண்ணீர் விட்டுக் கெஞ்சினான்.

மறுபடியும் அவனுக்கு நம்பிக்கை ஊட்டுவதற்குள் போதும் போதும் என்று ஆகிவிட்டது.

கொஞ்ச நேரம் எதையோ உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு, அவனே என்னைப் பார்த்து, "ஒருமுறை போலீசாரிடம் என்னைக் கொண்டு போய்ச் சேர்த்து, இரண்டு நாள் சிறையிலிருக்கும்படியாகவும், மூன்றாம் நாள் வெளியே அழைத்து வந்துவிடுவதாகவும் உறுதியாகச் சொன்னான். ஒரு குற்றமும் செய்யாத நான், அவனுக்காகச் சிறையில் அடைப்பட்டு இருந்தேன். ஆனால், சொன்ன சொல் தவறாமல் அவன் மூன்றாம் நாள் வந்து என்னை அழைத்துக் கொண்டு போனான். போலீசார் யாரும் அவனுக்குப் பகையாளி அல்ல. நாள்தோறும் நிறையப் பணம் வைத்திருக்கிறபடியால், அவனிடம் எல்லாரும் அன்பாகப் பழகுகிறார்கள். ஆனால், முனிசாமியும் நானும் சைனாபசாரில் நடப்பதற்குக் கூடப் பயந்தோம். அப்படி இருந்தும் எங்களை எல்லாரும் மிரட்டினார்கள். வேலன் உங்களைப் போல் வெள்ளை வெளேல் என்று மடிப்பு வேட்டியும், மடிப்புச் சொக்காயும் சிலவேளைகளில் கோட்டும் போட்டுக்கொண்டு திரிவான். சில நாட்களில் கடைகளில் வாடகைக்கு டவுசர் வாங்கி நல்ல செருப்புப் போட்டுக்கொண்டு திரிவான். இவ்வளவு

தைரியம் இருந்தும், ஐந்து நாளாக வரவில்லையே, கண்ணில் படவில்லையே என்பதை நினைக்கும்போது வயிறு பகீர் என்கிறது. எங்காவது ஆஸ்பத்திரியில் இருக்கிறானே, அல்லது சிறையில் இருக்கிறானே, தெரியவில்லை. நான் நோயாளியாக இருந்தாலும் அவன் பார்த்துக்கொள்வான்; சிறையில் இருந்தாலும் அவன் வந்து விடுதலை செய்துகொண்டு போவான். அவனிடம் பணம் இருக்கிறது. ஆனால் நான் அவனை எங்கே தேடுவது? என்ன உதவி செய்வது? எப்படி விடுதலை செய்வது? என்னிடம் பணம் ஏது?" என்று சொல்லி ஒரே கலக்கமாகப் பைத்தியம் பிடித்தவன் போல் பழைய கல்லையே உற்றுப் பார்த்துப் பெருமூச்சு விட்டான்.

அதற்குள் ஒருவர் என்னைத் தேடிக்கொண்டு வீட்டை நோக்கி வந்து உள்ளே நுழைந்து, "நல்ல காலம்; வெளியே போய்விட்டீர்களோ என்று நம்பிக்கை இல்லாமல் வந்தேன்" என்று சொல்லிக்கொண்டே அணுகினார். அவரை உள்ளே அழைத்துச் சென்று பேசிக்கொண்டிருந்தேன். பேச்சு முடிந்ததும் வெளியே வந்து பார்த்தபோது அந்த இளைஞன் அங்கே இல்லை. எவ்வளவு உறுதி கூறியும் எனமேல் அவனுக்கு நம்பிக்கை இல்லை என்று உணர்ந்தேன். "போனதும் நன்மையே, நமக்கு ஏன் இந்தத் தொல்லை?" என்று நானும் அமைதி அடைந்தேன்.

இது நடந்து இரண்டு வாரம் கழிந்து ஒரு நாள் மாலையில் நல்ல நிலவொளியில் வீட்டை நோக்கி வந்துகொண்டிருந்தேன். வழியில் அந்த மாரியம்மன் கோயிலைக் கண்ட கண், என் பழைய நினைவைத் தூண்டியது. அங்கே ஓர் இளைஞன் விழுந்து வணங்கிக்கொண்டிருந்தான். எதிரே ஒரு சீப்பு வாழைப் பழமும் பெரிய தேங்காய் ஒன்றும் இருந்தன. தேங்காயை உடைத்துக் கர்ப்பூரம் ஏற்றினான். கை

களைக் குவித்தபடியே நெடுநேரம் நின்று ஏதோ பாடிக் கொண்டிருந்தான். எனக்கு அந்த வேலன் நினைவு வந்தது. இருக்காது, இவர் யாரோ உண்மையான அன்பர் என்று நடக்க எண்ணினேன். எதற்கும் பார்த்துவிட்டுப் போக லாம் என்று இளைப்பாற வந்தவன் போல் நடித்துக் கோயிலை அடுத்த திண்ணையின்மேல் உட்கார்ந்து பார்த்துக்கொண் டிருந்தேன்.

அந்த வாழைப் பழச் சீப்பை எடுத்துத் தெருவில் போய்க்கொண்டிருந்த சில பிள்ளைகளை அழைத்து ஆளுக்கு ஒன்றாகக் கொடுத்தான். ஒரு முடி தேங்காயைத் தோண்டி ஆளுக்குக் கொஞ்சம் கொடுத்தான். சிறுவர்கள் போய்விட்ட பிறகு மற்ற முடியை எடுத்துக்கொண்டு கிழக்கு இற வாணத்து மூலைக்கு வந்தான். அந்தக் கல்சந்தில் கை வைத்து எதையோ எடுத்து எடுத்து மெல்ல வீசி எறிந் தான். ஒவ்வொரு முறையும் ஒரு பெருமூச்சு விட்டது எனக்குக் கேட்டது. கடைசியில் மெல்ல நகர்ந்தான். சிறிது தொலைவு நடந்ததும், கைக்குட்டையை எடுத்துக் கண் களைத் துடைத்துக்கொண்டே செல்வதைக் கண்டேன். என் நெஞ்சத்தில் ஏதோ துயரம் குடிகொண்டது. சிறிது நேரம் கழித்து எழுந்து, அந்தக் கல்சந்தை அணுகிக் கையிட் டுப் பார்த்தேன். அந்தத் தேங்காய் முடியை அப்படியே வைத்திருந்ததைக் கண்டேன். என்னை அறியாமல், என் வாய் 'ஐயோ' என்று ஒலித்தது. அப்பால் வந்தேன். அவன் எதையோ எடுத்து வீசி எறிந்தானே, அது என்ன என்று பார்க்கலாம் என்று அந்த இடத்திற்குப் போய்ப் பார்த்தேன். மேகங்கள் விலகிச் செல்ல, முன்னிலும் நன்றாய் நிலா ஒளி பரப்பியது. அந்த இடத்தில் தேங்காய்த் துண் டுகள் விழுந்து கிடந்தன; வாடிக்கிடந்தன; எறும்பு மொய்த் துக் கிடந்தன; எடுப்பாரின்றிக் கிடந்தன; கண்ணீரால் நனைந்து கிடந்தன.

# வாய் திறக்கமாட்டேன்

"நீங்கள் எப்படி சாமி, இங்கே வந்து சேர்ந்தீர்கள் ?" என்று திகைப்போடு கேட்டான் அவன்.

"இப்படித்தான், உன்னைப் போல்தான்" என்று அக்கறை இல்லாதவன்போல் பதில் சொல்லி முகத்தை அப்பால் திருப்பிக்கொண்டேன்.

"என்னை மறந்துவிட்டாற்போல் தெரிகிறது. நான் தெரியவில்லையா, சாமி ?" என்று அவன் கேட்டதும் திரும்பிப் பார்த்தேன். எனக்கு அவன் யார் என்றே தெரியவில்லை. ஒருவேளை அவன் என்னை அறிந்திருக்கலாம், பட்டணத்தில் பார்த்திருக்கலாம் என்று எண்ணினேன்.

"நீ யார் தெரியவில்லை, அப்பா" என்றேன்.

"என்ன, சாமி ! இப்படிச் சொல்கிறீர்களே ! நான் உங்கள் பக்கத்து வீட்டிலே......" என்றான். எனக்கு அப்போதுதான் நினைவுக்கு வந்தது. பக்கத்துப் பங்களாவிலே அவனை அடிக்கடி பார்த்தது நினைவுக்கு வந்தது. அந்த வியாபாரியின் வீட்டிலே அவன் சில மாதங்களுக்கு முன்னே வேலைக்காரனாக இருந்தது நினைவுக்கு வந்தது. "ஓ ! நீயா அப்பா ! செ. ப. ஐயா வீட்டில் வேலைசெய்து கொண்டிருந்தாயே ! சரிதான் ; மறந்துவிட்டேன், அப்பா. பட்டணத்தில் எத்தனையோ பேரைப் பார்க்கிறோம். மறந்துவிடுகிறோம்" என்று நீட்டினேன்.

"என்ன சாமி ! எத்தனை நாள் என்னோடு பேசியிருக்கிறீர்கள் !"

" ஆமாம் அப்பா ! நான்தான் சொன்னேனே ! மறந்து விட்டேன் " என்று குரலாலே சரிப்படுத்தினேன்.

" ஆமாம் சாமி ! நீங்கள் இங்கே எப்படி வந்து சேர்ந்தீர்கள் ? மறுபடியும் ஏதாவது காந்தி சண்டையா ?" என்று அவன் பழைய கேள்வியைப் புதிய வடிவத்தில் கேட்டான்.

" காந்தி சண்டை எல்லாம் முடிந்து போய்விட்டது. இப்போது ஏதப்பா " என்று பதில் சொல்லாமலே மறைக்கப் பார்த்தேன். அவனே விடவில்லை.

" நேற்றுக் கூட யாரோ சொன்னார்களே. பட்டணம தமிழருக்குச் சொந்தம் என்று காந்தி புதுச் சண்டை போடப்போகிறாராம். ஆந்திராக்காரர் யாரோ அவர்களுக்கு வேண்டும் என்று கேட்கிறாராம் " என்று அவன் அறிந்த அரசியலை என்னிடம் கொட்டினான்.

" அதெல்லாம் ஒன்றும் இல்லை அப்பா. அப்படிப் பேச்சு இருக்கிறது. அவ்வளவுதான். நம்ம பட்டணத்துக்கு யாராவது சண்டை போடுவார்களா ? கட்டின பெண்டாட்டியை யாராவது கேட்டால் விடமுடியுமா ? கலியாணம் ஆனபிறகு, என் பெண்டாட்டியா, உன் பெண்டாட்டியா என்று சண்டை போடுவது வெட்கமில்லையா ?" என்று பழைய கேள்வியை மறைப்பதற்காக முயன்றேன்.

" சரி, அது போகட்டும் சாமி. நீங்கள் இங்கே வந்தது தானே எனக்கு எப்படியோ இருக்கிறது " என்றான்.

இனிமேல் மறைக்கக்கூடாது என்று அப்போதுதான் உண்மையைச் சொல்லத் தொடங்கினேன். அந்தச் சிறைக்குப் போய்ச் சேர்ந்த மூன்றாம் நாள் நடந்தது இது. சிறைக்குப் போய் ஒரு மாதம் ஆகிவிட்டபடியால் அவன் பழைய கைதியாக இருந்தான். எனக்கு அந்த இடத்தில்

பழக்கம் மூன்றும் நாள் ஆனபடியால் கொஞ்சம் புதியவனாகவே இருந்தேன். அதனால்தான் அவன் என்னை உற்றுப் பார்த்து அடையாளம் தெரிந்துகொண்டு கேட்டான்.

என் கதையைச் சொல்லி முடிக்கும் வரையில் கேட்டுக் கொண்டிருந்தான். அவனுடைய மனத்தின் மயக்கம் அப்போதும் தீராதபடியால் கேள்விகள் கேட்கத் தொடங்கிவிட்டான். "சாமி! உங்களுக்கு ஏன் சாமி இந்தத் தொல்லை? சும்மா இருந்திருக்கக் கூடாதா? அந்தக் கூட்டுப் பட்டு ஸ்டேஷனில் எத்தனையோ பேர் இதைப் பார்த்துக் கொண்டு சும்மா போய்விடவில்லையா? நீங்களும் அப்படி வந்துவிட்டிருக்கக்கூடாதா? அவன் அரிசி ஒரு படி எடுத்துக்கொண்டு போனால்தான் உங்களுக்கு என்ன? ஒன்பது படி எடுத்துக்கொண்டு போனால்தான் உங்களுக்கு என்ன? அந்தப் போலீஸ்காரன் அந்தக் கிராமத்தானை எப்படிப் பேசினால் உங்களுக்கு என்ன? நீங்கள் ஏன் போலீஸ்காரனையும் ஸ்டேஷன் மாஸ்டரையும் எதிர்க்கவேண்டும்?" என்று வருத்தத்தோடு பலவாறு கேட்டான்.

நிலைமையை விளக்குவதற்காக அவனுக்கு விரிவாகச் சொன்னேன். "அப்பா! அரிசி கொண்டுவந்த அவன் ஒன்றும் தெரியாத ஏழை. கண்ணில் நீர்விட்டுப் போலீஸ்காரனையும் ஸ்டேஷன் மாஸ்டரையும் காலில் விழுந்து கெஞ்சினான். அந்த ஒருபடி அரிசியை அங்கேயே விட்டுவிட்டுப் போய்விடுவதாகச் சொன்னான். அபராதம் வேண்டுமானாலும் கட்டிவிடுவதாக ஒரு ரூபாய் எடுத்துக் கொடுத்தான். பெயர் எழுதி வழக்குப் போடவேண்டாம், குற்றவாளியாக்க வேண்டாம் என்று எவ்வளவோ கெஞ்சினான். அதற்கு முன்னாள் வியாழக்கிழமை வீட்டில் குழந்தைகளும் மனைவியும் பட்டினி இருந்தார்களாம். பட்டணத்தில் ஓர்

ஏழை பட்டினி இருந்தால் பக்கத்து வீட்டாரும் கேட்கமாட்டார்கள் அல்லவா ? அதற்காகப் பணம் எப்படியோ கடன் வாங்கிக்கொண்டு ரயிலில் போய்த் தாம்பரத்துக்குப் பக்கத்தில் ஏதோ கிராமத்திலிருந்து இரண்டு படி அரிசி எடுத்து வந்தானும். வழியிலே யாரோ ஒருவர் மிரட்டிப் பார்த்துப் பாதி எடுத்துக்கொண்டு அனுப்பினாராம். வெள்ளிக்கிழமை ஒருநாளாவது அரை வயிருவது குழந்தைகள் சாப்பிடட்டும் என்று எடுத்துவந்தானும். அப்படிப்பட்டவனை மிரட்டலாமா ? அழ வைக்கலாமா ? அதனால்தான் எனக்கு ஆத்திரம் வந்தது. அதே ரயிலில் மூட்டை மூட்டையாகத் திருட்டு அரிசி போகிறது. பணக்கார வீட்டுக் கலியாணங்களுக்குக் கிச்சிலிச் சம்பாவும் ஊசிச் சம்பாவும் நல்ல நல்ல அரிசி மூட்டைகள் எவ்வளவோ மோட்டாரில் போகின்றன. அதற்கெல்லாம் அதிகாரிகளே துணையாகவும் காவலாகவும் இருக்கிறார்கள். இந்த ஓர் ஏழைக்கு ஒருபடி அரிசி விட்டுவிடக் கூடாதா என்று ஸ்டேஷன் மாஸ்டரைக் கேட்டேன். இதற்காகப் போலீஸ்காரன் என்னைப் பிடித்துத் தள்ளினான். அதனால்தான் நான் ஓங்கி ஓர் அறை கொடுத்தேன் " என்று சொல்லி முடிப்பதற்குள் அவன் கண்களில் தாரை தாரையாகக் கண்ணீரைக் கண்டேன்.

சிறிது நேரம் அமைதி நிலவிற்று. பக்கத்து அறையில் யாரோ பாடிக்கொண்டிருந்தார்கள். அது பாரதியார் பாட்டுத்தான். " ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே " என்ற பள்ளுப் பாட்டுத்தான். " எல்லாரும் சமமென்பது உறுதியாச்சு " என்ற அடியை அழுத்தந் திருத்தமாக அந்தக் கைதி பாடியது ஏனோ தெரியவில்லை. அதற்குப் பதில் சொல்வது போல், " இல்லை, இல்லை " என்று மனச்சான்று சொல்லிக் கொண்டிருந்தது.

திடீரென்று பாட்டை நிறுத்தினார்கள். பூட்ஸ்போட்டு நடக்கும் ஒலிகேட்டது. சிறை அதிகாரிகள் யாரோ அந்தப் பக்கமாக நடந்து போய்க்கொண் டிருந்தார்கள்.

கண்ணைத் துடைத்துக்கொண்டே அவன் பேசினான். "இந்தக் காலத்தில் பணக்காரரைப் பற்றி ஒன்றுமே பேசக் கூடாது, பணிந்து போய்விட வேண்டும், சாமி" என்று எனக்கு அறிவுரை கூறுவதுபோல் சொன்னான்.

அவன் சொன்னது சரி என்று அடிக்கடி என் மனத்திலே தோன்றியதும் உண்டு. ஆனாலும் அப்போதும் அவனிடம் ஒத்துக்கொள்ள மனம் வரவில்லை. "அப்படிப் பணப்பூசை செய்ய என்னால் முடியாதப்பா. நான் ஆஸ்திகன், தெரியுமா?" என்று வீரமாக ஒரு சொல் சொன்னேன்.

அவன் பேசாமல் தலை குனிந்து இருந்தான். அவனுடைய கவலையை மாற்றுவதற்காக வேடிக்கையாகப் பேச்சை மாற்றினேன்.

"உனக்கு எது அப்பா தெய்வம்? பணமா? கடவுளா?" என்று கேட்டேன்.

"இரண்டும்தான்" என்று உடனே சொல்லி முடித்தான்.

"அதுதான் முடியாது. நான் சொல்லவில்லை, அப்பா. ஒருவன் கடவுளையும் பணத்தையும் ஒரு நிலையில் பூசை செய்ய முடியாது என்று பெரியோர்களே சொல்லியிருக்கிறார்கள்" என்றேன். என் தத்துவப் பேச்சு அவனுடைய நெஞ்சில் பதியவில்லை.

"என்னவோ சாமி, பணக்காரருக்கு அடங்கிப் போவது தான் நல்லது" என்றான்.

அப்போதுதான் எனக்கு ஓர் எண்ணம் தோன்றியது. அவன் சிறைத்தண்டனை அடைந்ததில் இதுபோல் ஒரு காரணம் இருக்க வேண்டும் என்று தோன்றியது. அவனை உடனே கேட்டேன். அந்தப் பதிலும் எதிர்பார்த்தபடியே இருந்தது.

அவன் வேலை செய்துவந்த இடம் பெரிய கள்ளமார்க் கெட்டுச் சூழல்! தடபுடலாகச் செலவும் செய்வார்கள். கணக்கு வழக்கற்ற வருவாய்க்கும் வழி தெரிந்து தேடிக் குவிப்பார்கள். கள்ள மார்க்கெட் என்பது அவர்களுக்குக் கை கண்ட மூலிகை போல. என்னுடன் கைதியாயிருந் தவன் படிப்பு இல்லாதவன்; ஆகையால் தந்திரம் தெரியா தவன்; கள்ள மார்க்கெட்டுக்குப பயன் படாதவன். உண் மையை மறைத்துப் பேசத் தெரியாத அவனை நம்பினுல் அவர்களுக்கு இடர் தானே! அவர்களுடைய செல்வமும் செல்வாக்கும் என்ன வேண்டுமானுலும செய்யும்! அவர்க ளுடைய பெண்ணுக்குத் திருமணம் செய்தபோது நாற்ப தாயிர ரூபாய் செலவு செய்தார்கள். நகை மட்டும் இருப தாயிரம். அன்றைக்கு ஒருநாள் ஒரு வேளையில் குறைந்தது ஐயாயிரம்பேர் கலியாணப் பந்தலில் சாப்பிட்டார்கள். நாங் களே பார்த்து வியந்தோம். எட்டு அவுன்ஸ் அரிசிக்கு ஏங்கிக் கிடக்கும் காலத்தில் ஐயாயிரம் பேருக்குச் சோறு போட முடிந்ததே! ஆனுல், பாவம், அந்த ஏழை எப்படியோ பலியாகிவிட்டான். திருமணச் சாப்பாட்டு அரிசி திருட்டு வழியில் வந்தது அல்லவா? அந்த வழக்கிலே தாங்கள் அகப்படாமல் அவனைத் தள்ளிவிட்டார்களோ என்னவோ தெரியவில்லை. பங்கீட்டு அதிகாரியும் போலீசாரும் திருமணம் முடிந்த எட்டாம் நாள் வந்தார்களாம். அப்போது அந்த ஏழையின் பெயரைச் சொன்னுர்களாம். அவனுக்குச் சம்மன் வந்ததாம். "டே! யார் என்ன கேட்டாலும் கோர்ட்டில்

வாயை மூடிக்கொண்டு இரு. மூன்றுமாதம், நான்குமாதம் தண்டனை போடுவார்கள். பேசாமல் இருந்துவிட்டு வா. நாங்கள் பார்த்துக்கொள்வோம். உன் குடும்பத்தையும் காப்பாற்றுவோம். நீ வந்த பிறகு உனக்கு இருக்கும் கடனைத் தீர்த்து அந்த நிலத்தை உனக்கே திருப்பிக் கொடுத்துவிடுவோம்" என்று முதலாளி சொன்னாராம். "வாயைத் திறந்து தப்பும் தவறுமாக எங்களைப் பற்றி ஏதாவது உளறிக் கொட்டினால் உனக்குத்தான் தொல்லை. ஆயுள் தண்டனை கிடைத்தாலும் கிடைத்துவிடும்" என்று மிரட்டினாராம்.

இந்த உண்மையை அவன்வாயிலிருந்து வாங்குவதற்கு எவ்வளவோ பாடுபட்டேன். "சாமி, யாருக்கும் சொல்ல வேண்டாம்; மறந்துவிடுங்கள்" என்று என்னைப் பார்த்துக் கண் கலங்கிக் கேட்டான். பாவம், அவனுக்கு இன்னும் பணப் பூசையில் நம்பிக்கை இருந்தது.

" அப்பா நான் யாருக்கும் சொல்லவேமாட்டேன். ஆனால், ஒன்று சொல்கிறேன். இப்படிப் பயந்து பணப் பூசை செய்தும் பயனில்லையே! ஒரு குற்றமும் செய்யாத உனக்குப் பதினைந்து மாதத் தண்டனை ஆயிருக்கிறதே!" என்றேன்.

"நான் என்ன செய்வேன், சாமி? தலைவிதி யாரை விட்டது?" என்றான்.

" அப்பா, எப்படியும் சிறைக்கு வந்துவிட்டாய். இங்கே யாவது எண்ணிப்பார். ஒன்றே ஒன்று சொல்கிறேன். பணமும் உனக்கு ஒரு தெய்வமாக இருக்கிறது. ஏன்? உலகத்திற்கே தெய்வமாக இருக்கிறது. ஆனால் அந்தப் பணத் தெய்வத்தைச் சிலர் நம்புகிறார்கள். சிலர் பூசை செய்கிறார்கள். சிலர் கைக்குள் வைத்துக்கொண் டிருக்

கிறார்கள். அந்தப் பணத் தெய்வம் யாரைக் காப்பாற்று கிறது, தெரியுமா ? நம்புகிறவர்களை அல்ல, பூசை செய்கிற வர்களை அல்ல, கைக்குள் அடக்கிவைத்திருக்கிறவர்களை மட்டுமே காப்பாற்றுகிறது " என்றேன்.

" உண்மைதான், சாமி " என்றான் அந்தக் கைதி. தேசத்திற்காகச் சில முறை சிறை சென்று பல கைதிக ளுடன் நான் பழகியிருக்கிறேன் அல்லவா ? அதனால் " உண்மைதான், சாமி " என்று அவன் சொன்ன பதிலால் மனம் திருந்திவிட்டதாக நான் நம்பவில்லை.

அன்று இரவு நல்ல தூக்கத்திலிருந்து கொசுக்கடி பொறுக்க முடியாமல் விழித்துக்கொண்டேன். என் புதிய தோழன் குறட்டை விட்டுக்கொண்டிருந்தான். ஒருமுறை வாய்பிதற்றினான். " சாமி ! எனக்கு நிலம்கூட வேண்டாம் சாமி ! நீங்களே எடுத்துக்கொள்ளுங்கள்—என் பசங்கள் வயிற்றைப் பார்த்துக்கொள்ளுங்கள் — எட்டு அவுன்ஸ், எட்டு அவுன்ஸ் என்று சொல்கிறார்கள்—நீங்கள் சொன்ன படி கேட்பேன், சாமி — வாயே திறக்கமாட்டேன் " என்ற சொற்களை அரைகுறையாகப் பிதற்றிக்கொண்டே மறு படியும் குறட்டை விட்டான். " பணத் தெய்வமே! உனக்குக் கண் இல்லையா ?" என்று சோல்லிக்கொண்டே நான் கொட் டாவி விட்டேன்.

# எதையோ பேசினர்

வேதாந்த நெறிக்கும் மற்றச் சமய நெறிகளுக்கும் உள்ள வேறுபாட்டை ஆராய்ந்து குறிப்பெழுதிக்கொண்டு வீட்டை விட்டுக் கிளம்பினேன். 'இன்று சமய உலகிலேயே ஒரு தெளிவை ஏற்படுத்திவிட முடியும்' என்ற நம்பிக்கை யோடு தெருவில் நடந்தேன். என் பேச்சைக் கேட்க நல்ல கூட்டம் வந்திருக்கும் என்றும் தற்பெருமையாக எண்ணிக் கொண்டே பஸ் நிலையத்தை அடைந்தேன்.

"உனக்கு வாழ்க்கைப்பட்டு" என்று தொடங்கி விம்மிய குரலைக் கேட்டுத் திரும்பினேன். குழிந்த கன்னங்களையும் அழுக்கேறிய ஆடையையும் கண்டேன். பள பள என்று மின்னும் கற்களோ உலோகமோ காதிலும் இல்லை; கழுத் திலும் இல்லை; கையிலும் இல்லை. அந்தப் பெண்ணுரு வைப் பார்த்ததும் பார்க்காததுமாய் நின்றிருந்த ஒருவர் காக்கி உடை உடுத்திருந்தார். அவருடைய கண்களிலும் வறுமை இருந்தது; பேச்சிலும் அந்த வறுமை இருந்தது.

பேச்சில் வறுமை என்றால் குறைந்த அளவான பேச்சு என்று எண்ண வேண்டாம். வறுமையால் தாழ்வுற்றுப் பிறரையும் தாழ்வுறச் செய்யும் போக்கு அந்தப் பேச்சில் இருந்தது; அநாகரிகம் அந்த பேச்சில் இருந்தது; ஒரு வகைப் போக்கிரித் தன்மை அந்தப் பேச்சில் இருந்தது. இவை எல்லாம் வறுமையின் விளைவுகள் அல்லவா? இப் படிப்பட்ட வறுமை அவருடைய பேச்சில் இருந்தது.

ஐந்து வயதுள்ள பையன் அந்தத் தாயின் முன்தானை யைப் பற்றிக்கொண்டே நின்றான்; அவனுடைய பார்வை

தாயின் முகத்துக்கும் தந்தையின் முகத்துக்கும் தாவித் தாவிப் பறந்துகொண்டிருந்தது. தாய்க்கும் தந்தைக்கும் இடையே மூன்று வயதுள்ள பெண் குழந்தை இங்கும் அங்கும் திரும்பிக்கொண்டிருந்தது.

“ இங்கே யார் உன்னை வரச் சொன்னது ?” “ எனக்கு வருவதற்கு வழி தெரியும்.” “ உன் துன்பம் உனக்கு, என் தொல்லை எனக்கு.” “ நான் நூறு நூருகச் சம்பாதிக்கிறேனு ?” “ நானே வேலைக்குக் காப்பி இல்லாமல், காப்பிக்குக் காசு இல்லாமல் அலைகிறேன்.” “ என்னை என்ன செய்யச் சொல்கிருய் ?” “ இங்கெல்லாம் வரக்கூடாது, வந்து வாய்திறக்கவும் கூடாது ”—இந்த வாக்கியங்களே நான் அவருடைய பேச்சிலிருந்து நாகரிகமாகப் பொறுக்கி எடுக்கக் கூடிய வாக்கியங்கள்.

இவற்றைத் தொலைவிலிருந்து கேட்ட போதே என் மனம் இளகிவிட்டது, கசிந்து உருகத் தொடங்கி விட்டது.

இவர்கள் பேச்சைக் கேட்டு நின்ருல், மானம் என்ற ஒன்று அவர்களின் நெஞ்சைப் பிளக்குமே என்று அஞ்சி அப்பால் நகர்ந்தேன். பஸ் ஏறி உட்கார்ந்தேன். அவர்கள் இருந்த இடத்தை எட்டிப் பார்த்தேன் இருவரும் பேசியது கேட்கவில்லை. கை நீட்டி நீட்டி அசைத்த அசைவிலிருந்து பேச்சில் வேகம் மிகுந்துவிட்டதோ என்று எண்ணினேன்.

பஸ் புறப்படுவதற்கான வீளை ஊதப்பட்டது. அதைக் கேட்டதும், அந்த ஆள் அங்கிருந்து மடமட என்று நடந்து வரத் தொடங்கினுர். தலை மட்டும் குனிந்தபடியே நடந்து வந்தார்.

“ அப்பா அப்பா ” என்ற குரல் என் காதுவரை எட்டியது. பையனே பெண்ணே என்று உற்றுக் கேட்டேன்.

பையன் சிறிது தூரம் பின் தொடர்ந்து வந்து திரும்பி விட்டான். தாயை நெருங்கி முன் தானையைப் பிடிக்க முயன்றான்; ஆனால் என்ன காரணத்தாலோ அந்தத் தாய் அவனுடைய கன்னத்தில் இடித்தாள்; தலையைத் தட்டினாள். பையன் அழுதுகொண்டே நின்றான்.

அந்த ஆளோ பஸ்ஸை நெருங்கி வந்துவிட்டார். அந்தச் சிறு பெண் குறுகுறு என்று தொடர்ந்து ஓடி வந்து கொண்டே இருந்தாள். "போ, வராதே, அம்மாகிட்டே போ, அடிப்பேன் போ" என்றார் அவர். அந்த இளம் பெண்ணோ, "அப்பா, காலணா. அப்பா, காலணா" என்று விடாமல் கேட்டுக் கெஞ்சினாள். அவர் தயங்காமல் பஸ்ஸின் முன்புறக் கதவைத் திறந்தபோதுதான், நான் ஏறிய வணடியின் டிரைவரே அவர் என்பதை அறிந்தேன்.

சிறுமி—மூன்று வயதுள்ள குழந்தை—இளங் கைகளை நீட்டிக் கேட்டுக்கொண்டே நின்றாள். பஸ் புறப்படுவதற்கு முன்னே அவளுடைய கையில் ஒரு காலணா விழுந்தது. அதைப் பெற்றுக்கொண்டதும் அவள் துள்ளித் துள்ளி அசைந்து ஓடுவதைக் கண்டேன்.

பஸ் புறப்பட்டது. இந்த இளங் குழந்தையையும் அந்தத் தாயின் கை தாக்குமோ என்று அஞ்சினேன். டிரைவராக முன்னே இருந்த அந்த ஆளையும் பார்த்தேன். ஆனால், என மனம் மட்டும் கந்தல் பாவாடையோடு ஓடிய அந்தப் பெண்ணையும் மறக்கவில்லை; தாயின் கையினால் தட்டும் இடிப்பும் பெற்றும் அவள்முகத்தையே பார்த்து அழுத அந்தப் பையனையும் மறக்கவில்லை.

என் பின்புறத்தில் உட்கார்ந்திருந்த ஒருவர், "மூன்று நான்கு வயதுள்ள குழந்தைகள் பஸ்நிலையத்துக்கு வந்து காலணா கேட்டுப் பிச்சை எடுக்கலாமா? மற்ற நாட்டில்

இப்படி நடக்குமா ?" என்று பக்கத்தில் உள்ளவரிடம் சொன்னார். இதைக் கேட்டவர், " ரயிலிலும் இதே தொந்தரவு. ஐந்தாறு வயதுப் பையன்கள் எல்லாம் பாட்டுப் பாடிக் காசு கேட்கிறார்கள் " என்றார். " சின்ன வயசிலேயே பீடி பிடிக்கக் கற்றுக்கொண்டார்கள் ; அதற்குக் காசு வேண்டாமா ?" என்றார் மற்றொருவர். " பீடிக்குக் காசு வேண்டுமானால், மூட்டை தூக்கிக் கூலி வாங்குவதுதானே. அதற்குப் பதில் பிச்சை எடுக்கலாமா?" என்றார் பருமனாக இருந்த இன்னொருவர். " சின்ன பையன்களை மூட்டை தூக்க விடலாமா ? அதைக் கண்ணால் பார்க்கலாமா ? அப்படி ரஷ்யாவில் விடுவார்களா ?" என்றார் கல்லூரி மாணவர் ஒருவர்.

இந்தச் சொற்கள் டிரைவர் காதில் விழுந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். ஆனால் பஸ் ஒலி அதற்கு இடந் தருமா ?

அந்தப் பெண்குழந்தை பிச்சை எடுப்பதாக எண்ணி விட்டார்களே என்று வருந்தினேன். யாரை நோவது ? வீட்டில் கண்டு கொஞ்சி மகிழாமல், வழியில் கண்டு கெஞ்சி அழவைத்த தந்தையை நோவதா ? மானத்தோடு வீட்டில் அடங்கி மடியாமல் கணவனைத் தேடி வெளியே வந்து போராடிய தாயை நோவதா ? மனம் வரவில்லை.

அந்தப் பையனையும் நினைந்தேன். ரயிலில் பாடுவது, பீடி பிடித்துத் திரிவது, மூட்டை தூக்குவது என்றெல்லாம் உடன் இருந்தவர்கள் சொன்னபோது, அந்தப் பையனுடைய எதிர்காலத்தைச் சோதிட முறையாகக் கூறுவது போல் தோன்றியது.

அந்தத் தாய் டிரைவருடைய மனைவிதானா, மனைவியானால் அவரைத் தேடி வரவேண்டிய காரணம் இல்லையே, ஒருவேளை வைப்பாட்டியோ, வைப்பாட்டியானால் முதலி

லிருந்த அன்பு பிறகு குறைந்த காரணம் என்னவோ என்று பலவாறு எண்ணலானேன். அவர் வேறு இடத்தில் புது வைப்புத் தேடி அன்பு மாறிவிட்டாரோ, அல்லது அவளுடைய ஒழுக்கத்தில் ஏதேனும் குறை இருக்குமோ, திருமணம் செய்த தொடக்கத்திலேயே அன்பு இருந்திருக்காதோ என்றும் பலவாறு எண்ணிக் கலங்கினேன்.

தொடக்கத்தில் அன்பு இல்லாமல் திருமணம் செய்தும் படிப்படியாக அன்பு வளரவில்லையா? தொடக்கத்தில் அன்பு நிறைந்திருந்தும் பிறகு வாழ்க்கை கெடவில்லையா? செல்வர்கள் வீட்டில் அன்பு வளர்வதற்குப் பட்டும் பொன்னும் காரணமாக இருப்பதுபோல், ஏழைகள் வீட்டில் அன்பு வளர்வதற்குக் காரணம் ஒன்றும் இல்லையா? கந்தல் உடுத்து அழுக்குப் படிந்திருந்தாலும் அழகும் கவர்ச்சியும் குன்றாத அந்த இரண்டு குழந்தைகளால் அன்பு வளர முடியாதா?— இந்தக் கேள்விகளும் என் உள்ளத்தில் எழுந்தெழுந்து கலக்கின.

இந்தக் கலக்கத்திற்கு இடையே பஸ்ஸை விட்டு இறங்கி அந்தச் சங்கத்திற்குச் சென்று சேர்ந்தேன். கலக்கத்திற்கு இடையில்தான் மேடை ஏறிப் பேசினேன். நினைத்து வந்ததுபோல் அவ்வளவு தெளிவாகப் பேச முடியவில்லை. ஆனால், பேச்சின் முடிவில் தெளிவும் இருந்தது; துணிவும் இருந்தது.

" உலகத்தில் உள்ளவை எல்லாம் என் பரிணமம் என்று உணர்பவனே ஞானி. உலகத்தில் உள்ள குறைகளை அவரவர்களின் தலைமேல் சுமத்திவிட்டுத் தான் தூயவனாக எண்ணுகின்றவன் நாத்திகன். மற்றவர்களின் குறைகளை எல்லாம் தன்மேல் சுமத்தி எண்ணி, அவற்றைத் திருத்தும் பொறுப்பும் தானே மேற்கொள்கின்றவன் ஆத்திகன். அன்பற்ற கணவன், அன்பற்ற மனைவி, அறிவற்ற தந்தை,

அறிவற்ற தாய், திக்கற்ற பையன, திக்கற்ற பெண், பொறுப்பற்ற குடும்பம், புறக்கணித்த சமூகம் என்னும் இந்தக் கொடுமைகள் இல்லாத நல்ல நாளை எதிர்பார்த்துத் தொண்டு செய்கிறவனே வீரன். அதற்கு ஏற்றபடி எண்ணக் கற்றுக்கொள்கிறவனே அறிஞன். அந்த நாள் வர நெடுங்காலம் செல்லலாம். ஆனால் எண்ணுவதற்கு நெடுங்காலம் வேண்டியதில்லை. இன்றே எண்ண முடியும் அல்லவா? இப்போதே எண்ண வேண்டும் அல்லவா? எண்ணுவதற்கு ஒரு துணிவு—வீரம்—வேண்டும். அந்தத் துணிவு உடைய வீரன்தான ஞானி. அவன் என்ன எண்ண வேண்டும்? அன்பற்ற, அறிவற்ற, திக்கற்ற பொறுப்பற்ற நிலைகளுக்கெல்லாம் காரணம் சமுதாயத்தில் உள்ள பண வேட்டைதான் என்று எண்ணவேண்டும். அங்கங்கே காண்கின்ற குறைகளுக் கெல்லாம் அவரவர் களின்மேல் குறை இல்லை என்று எண்ண வேண்டும். குறையுடைய சமூக அரசியல் அமைப்பே காரணம் என்று எண்ணவேண்டும். பணவேட்டையற்ற சமுதாயத்தை அமைப்பதே கடமை என்று எண்ணவேண்டும். முரடர்களைக் கண்டாலும், ஒழுக்கம் கெட்டவர்களைக் கண்டாலும் அன் பற்றவர்களைக் கண்டாலும் அறிவற்றவர்களைக் கண்டாலும் திக்கற்றவர்களைக் கண்டாலும் எவன் இப்படி எண்ணு கிறானே, அவன்தான் மெய்யுணர்வு பெற்றவன். அவன் தான் உண்மை உணர்ந்த ஞானி. மற்றவர்கள் எல்லாரும் திண்ணை வேதாந்தம் பேசுகிறவர்களே" என்று பேசி முடித்தேன்.

தலைவர் மோதிரத்தையும் சரிகை மேலாடையையும் மெல்ல ஒழுங்கு படுத்திக்கொண்டார். ஒரு கனைப்புக் கனைத் தார். முடிவுரை சொல்லத் தொடங்கினர். அப்போது அவருடைய உறவினர் ஒருவர் அவசரமாக அவரைத்

தேடிக்கொண்டு வந்தார். தலைவருடைய தமக்கை மகள் திடீரென்று ஆபத்தான நிலை அடைந்து ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு அழைத்துவரப்பட்டதாகச் செய்தி வந்தது. தலைவர் விரைந்து கூட்டத்தை முடித்தார். கவலையோடு, சுருக்கமாக, "சொற்பொழிவாளர் எடுத்த பொருளை விட்டுவிட்டு எதை எதையோ பேசினுர்" என்று ஒரு வாக்கியம் குத்தலாகச் சொல்லி முடித்தார்.

கூட்டம முடிந்து நான் வீட்டுக்குத் திரும்பி வந்த போது, வழியில் ஒரு தெரு மூலையில் சிறு கூட்டம் இருந்தது. நின்றேன். காரணம் தெரிந்துகொள்ள விரும்பினேன். யாரோ ஒருத்தி நஞ்சு குடித்துக் குற்றுயிராய் ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லபபட்டதாகச் சொன்னுர்கள். அங்கிருந்து நடக்கத் தொடங்கியபோது, கூட்டத்திலிருந்த ஒருவர், "ஆமாம், அந்த டிரைவர்க்கு இன்னும் யாரும் தெரிவிக்கவில்லையா ?" என்று கேட்டார். "அவனைப் போலீசார் விசாரணைக்கு அழைத்துக்கொண்டு போயிருக்கிறுர்களாம்" என்றுர் மற்றொருவர்.

"அவன் பாவி. அந்தப பெண்மேல் குற்றம் சொனனுல் கண் அவிந்து போகும். கணவனுடைய கொடுமை பொறுக்க முடியாமல் இப்படிச் செயதுகொண்டிருப்பாள். அவளுடைய தாய்மாமன் ஒருவர் இருக்கிறுர். நல்ல பணக்காரர், படித்தவர், வேதாந்தி" என ஒருவர் சொல்லிக்கொண்டே நடந்தார்.

# கட்டாயம் வேண்டும்

ஒருநாள் பகல் 10 மணிக்குச் சென்னை பிரபாத் டாக்கீஸ் அருகே நின்றுகொண்டு, சைனு பசாருக்குச் செல்லும் டிராம் வண்டியை எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். என் எதிரே சிறுவன் ஒருவன் ஓடிவந்து "ஐயா!" என்முன். அவன் வயது பன்னிரண்டு இருக்கும். மேலே கிழியாத சட்டை; கீழே கிழிந்த துண்டு; இரண்டும் அவ்வளவாக அழுக்குப் படவில்லை. மெலிந்த உடல்; ஆனலும் நலம் கெடவில்லை; முகத்தில் ஒருவகை மலர்ச்சி; கண்களில் கபடற்ற நல்ல பார்வை; கண்டவர் எல்லாரையும் கவர்ச்சி செய்யும் தோற்றம்; இவை அவனிடம் கண்டவை. அவனுடைய வாய்ச்சொல்லைக் கேளாமல், தோற்றத்தை மட்டும் கண்டிருப்பேனுனல், நான இந்த நாட்டைப் பற்றிப் பெருமை கொண்டு, "இவன் ஓர் இளஞாயிறு" என்று எண்ணிச் சென்றிருப்பேன். "ஐயா" என்று மெல்லிய குரலில் விளித்து, அவன் கை நீட்டியபோதுதான் எனக்கு இரக்கம் பிறந்தது. ஆயினும், அந்த இரக்கம் உடனே மாறியது.

சென்னையில் உண்மையான பிச்சைக்காரர் யார், உலகை ஏமாற்றும் சோம்பேறிகள் யார் என்று பிரித்தறிய முடியவில்லை. பஸ் நிற்கும் இடங்களிலெல்லாம் கூட்டம் கூட்டமாக ஏழை மக்கள் நிற்கிருர்கள். அந்தக் கூட்டங்களை நாள்தோறும் பலமுறை கண்டு, இரப்புரையை அடுத்தடுத்துக் கேட்டுக் கேட்டுப் பழகிய என் மனம் எப்படி இருக்கும்? கொடுங்கோல் மன்னனுய் மாக்பெத் என்னும்

கொடியோன் ஆண்ட நாட்டில், சாவுமணி ஒலித்தால், செத்தவர் யார் என்று கேட்பார் ஒருவரும் இல்லை என்று ஷேக்ஸ்பியர் தம் நாடகத்தில் எழுதியுள்ளார். ஏழை மக்கள் ஆக்கமும் அறிவும் உணவும் உடையும் இல்லாதவர்களாய் விலங்கினங்களாய் வாழ்ந்துவரும் இந்த நாட்டில் அவர்களுடன் நன்ருகப் பழகினவர்களுக்கு இரக்கம் உண்டாகுமா? அதிலும், இரப்பவர் மிகுந்த சென்னையில் அவர்களுடைய வறுமைக்கே காரணமாக இருந்து மனம் மரத்துப் போன தமிழருக்கு இரக்கம் தோன்றினலும் உடனே மறைந்துவிடும் அல்லவா?

அந்த ஏழைச் சிறுவன் நீட்டிய கையைப் பார்த்து "இந்த வயதில் உனக்கு இந்த வேலை ஏன் அப்பா? மீன் குஞ்சுக்கு நீந்தத் தெரிவதுபோல் தமிழ்ப் பையனுக்குப் பிச்சை எடுப்பது இயற்கை யாய்விட்டதே! போய் மூட்டை தூக்கிப் பிழை அப்பா!" என்றேன்.

"எல்லாரும் இப்படித்தான் சொல்கிருர்கள். நீ என்ன கூனு, குருடா என்று கேட்கிருர்கள். என் பசிக்கு வழிகாட்டினவர்கள் யாரும் இல்லை. ஒரு காலணு கொடுங்கள் ஐயா" என்ருன்.

"காலணு அல்ல, கட்டாயம் ஓரணு கிடைக்கும். இந்தப் பட்டணத்தில் மூட்டை தூக்கும் வேலைக்குப் பஞ்சம் இல்லை. நான் ஒன்றும் கொடுக்க மாட்டேன். வழக்கம் இல்லை. வீட்டுக்கு வந்தால், சோறு இருந்தால், போடச் சொல்லுவேன்" என்றேன்.

"உங்கள் கையில் இருக்கும் இரண்டு புத்தகங்களைக் கொடுங்களேன். நான் சுமந்துகொண்டு வருகிறேன். அதற்குக் கூலியாகக் கொடுங்கள். காலணு கொடுங்கள்; போதும்" என்ருன்.

" எப்படியாவது என்னிடம் காலணு வாங்க வேண்டும் என்று பார்க்கிருய். பிச்சைக்காரர்க்குக் கொடுப்பதில்லை என்று விரதம், தெரியுமா ? உன்னைப் போன்ற சோம்பேறி யிடம் நான் ஏமாற மாட்டேன்" என்றேன்.

" ஐயா ! நான் சோம்பேறி அல்ல. கோபித்துக்கொள்ள வேண்டாம். வேலை தான் வேண்டும் ; கட்டாயம் வேண்டும். வேலை கொடுத்தால் கட்டாயம் செய்வேன். இந்தப் பட்டணத் திற்கு வந்த நாளாக அலைகிறேன். முந்தா நேற்றெல்லாம் சென்ட்ரல் ஸ்டேஷனில் இருந்தேன். கூலி வேலை கிடைக் கும் என்று காத்திருந்தேன். அங்கே இருக்கும் மூட்டை தூக்கிகளிடம் நான் பட்ட பாடு போதும். அவர்கள் எல்லா ரும் ஒரே கட்சி. என்னை அங்கே நிற்கவும் விடாமல் துரத்தி ஞர்கள். ஆனால் எல்லாரையும் பழிக்கவில்லை. நல்லவன் ஒருவன் ; எனக்கு இரண்டு ஆப்பம் வாங்கிக் கொடுத்தான். அதனால்தான் இன்னும் உயிரோடிருக்கிறேன் " என்று சொன்னன்.

அதற்குள், டிராம் வண்டி தொலைவில் வருவது கண் ணுக்குத் தென்பட்டது. " இன்னும் ஒன்று கேளுங்கள் ஐயா !" என்று அந்தச் சிறுவன் என் கவனத்தைத் திருப் பினன். " அந்த மாதிரி பிச்சை வாங்கி வயிறு வளர்க்க எனக்குப் பிடிக்கவில்லை. நேற்று முழுதும் பூக்கடையண்டை இருந்தேன். அங்கே ரிக்ஷாக்காரர் என்னைச் சும்மா விட வில்லை. யாரிடமாவது கூலி மூட்டைக்குப் போனல், அவர் கள் என்னைக் கொன்று கூவத்தில் போட்டுவிடுவதாகப் பயமுறுத்தினர்கள். போலீசாரிடம் சொல்லி மூடி வைப்ப தாக விரட்டினர்கள். அவர்கள் பேச்சைக் கேட்டுப் போலீ சாரும் என்னைத் துரத்தினர்கள். ஆனால் ஒருவரிடம் கூலி வேலை எப்படியோ கிடைத்தது. கூலியும் பேசாமலே அவர் கையில் இருந்து பழக்கூடையைத் தலைமேல் வைத்துக்

கொண்டேனே இல்லையோ, இரண்டு ரிக்ஷாக்காரர் ஓடிவந்து ‘சாமி, சாமி, அந்தப் பையனுக்குக் கொடுக்கிறதை எங்களுக்குக் கொடுங்கள். ரிக்ஷாவில் ஏறிக்கொள்ளுங்கள்’ என்று சொல்லி என் தலைமேல் இருந்த பழக்கூடையை வலியப் பிடுங்கிக்கொண்டு என்னைத் தள்ளினார்கள். ஒரு ரிக்ஷாவில் பழக்கூடையுடன் அவர் போய்விட்டார். போய் விட்ட பிறகு மற்றொரு ரிக்ஷாக்காரன் என்னைச் சும்மா விடவில்லை. இதோ அடையாளம்” என்றான். சட்டையைத் தூக்கி முதுகில் பட்ட புண்ணைக் காட்டினான். “இந்தக் கதி வரும் என்று நான் எப்போதுமே நினைக்கவில்லை. ஆறும் வகுப்பு வரைக்கும் நான் படித்தும் ஒரு பயனும் அடையவில்லை. நல்ல குலத்தில் பிறந்திருந்தாலாவது உறவினர் காப்பாற்றுவார்கள். அம்மா ஒரு சாதி, அப்பா ஒரு சாதி. தாய் செத்த பிறகு எனக்குத் திக்கு இல்லை. வீடு இல்லை, வாசல் இல்லை, ஊர் இல்லை.........இன்னும் ஒன்று சொல்கிறேன். கொஞ்சம் கேளுங்கள். நேற்றிரவு நான்—” என்று சொல்லிக்கொண்டேயிருந்தபோது பிரபாத் டாக்கீஸ் எதிரே டிராம் நின்றது. நான் ஏறிக்கொண்டேன்.

டிராம் நகர்ந்தது; உடனே திரும்பினேன்; அந்தப் பையனைப் பார்த்தேன். அவன் கை எடுத்துக் கும்பிட்டுக் கண்ணீர் விட்ட நிலையில் இருந்தபோது, அவன் கழுத்தின் மேல் கை வைத்தபடி ஒரு தடியன் தள்ளிக்கொண்டே போய்க் கீழே விழச் செய்தான்; தூ என்று துப்பினான்; காலால் உதைத்தான். அந்தப பையனோ எதிர்க்கவும் இல்லை; ஏன் என்று கேட்கவும் இல்லை. கும்பிட்டுக் கண்ணீரைத் துடைத்துக்கொண்டே எழுந்து உட்கார்ந்தாற்போலத் தெரிந்தது. டிராம் மூண்ணடி அருகே வந்துவிட்டது. பையனைப் பார்க்க முடியவில்லை.

என் மனம் எல்லாம் அவனை நாடிச் சென்றது. அவன் வரலாற்றைப் பொறுமையுடன் கேட்டு ஆறுதல் அளிக்க முடியவில்லையே என்று வருந்தினேன். தொழிலுக்கு நேரம் ஆனதே என்று விரைந்து டிராம் ஏறினேன்; என்ன நடந்ததோ, என்ன காரணமோ என்று எண்ணி ஏங்கினேன். பெருமூச்சு விட்டேன். என் பக்கத்தே வண்டியில் இருந்த நண்பர் ஒருவர் என்னைப் பார்த்து, "ஐயா! நீங்களும அந்தக் கொடுமையைத்தான் பார்த்துக்கொண்டு வந்தீர்களா? அந்தச் சிறுவனை அடித்துத் தள்ளி உதைத்த தடியனைப் பற்றி நினைக்கும்போது என் மனம் பதறுகிறது. அந்தத் தடியனை நான அறிவேன். அவன் தந்தை எங்கள் தெருவில் ஒரு பெரிய மாடிவீட்டுக்காரர். பெரிய கண்ட்ராக்டராக இருந்து நல்ல செல்வம் சேர்த்தார். அவருக்கு ஒரே மகன் அவன். மகன் எப்படியாவது பி. ஏ. படிக்கவேண்டும் என்பது தந்தையின் அவா. அதற்காக ஆங்கிலத்துக்கு வேறே, தமிழுக்கு வேறே, கணக்குக்கு வேறே என்று ஆசிரியர் மூவரை வீட்டில் வருவித்துக் கற்பிக்கச் செய்தார். அவனோ சினிமாக்களையும் புதிய ஓட்டல்களையும் வேலைக்காரச் சிறுமிகளையும் தேடித் திரிந்தான். எட்டாம வகுப்பிலேயே இரண்டு முறை தவறி எப்படியோ ஒன்பதாவது வகுப்பிற்கு வந்துவிட்டான். தனக்கு இணங்கி நடக்காத சிறுவர்களை அடிப்பதும் உதைப்பதும் அவனுடைய முதல் வேலை. போலீசாரையும் அவன் வசப்படுத்தி வைத்திருக்கிறான். அவன் இன்னும் சில ஆண்டுகள் வாழ்வானானால், பல கொலைகளும் கொடுமைகளும் செய்வான். தந்தையின் செல்வம் அவனுக்குத் துணையாக இருக்கும். உலகம் அப்படித்தான் இருக்கிறது. இருந்தாலும் மனம் பொறுக்கவில்லை. என்ன செய்வது?" என்றார். நானும் ஏழைச் சிறுவன் பேசிய எல்லாம் எடுத்துச் சொன்னேன். அவர் மனம் உருகி வருந்தினார். "காலம் கெட்டுப்போனது." என்றார்.

அன்று பகல் தொழில் முடிந்தபிறகு, மாலையில் திரும்பி வந்தபோது பழைய நினைவுகளும் திரும்பி வந்தன. அந்தச் சிறுவனின் முகத் தோற்றம் என் மனத்தை விட்டு நீங்கவில்லை. அறிஞர் முகத்திலும் பெண்கள் முகத்திலும் குழந்தைகள் முகத்திலும உள்ள அறிவும் அமைதியும் அன்பும் சேர்ந்து கலந்து அவனுடைய முகத்தில் விளங்கியதை நினைத்தேன். அவனுடைய துன்பத்தை ஒரு சிறிதும் நீக்காமல் வந்துவிட்டோமே என்று எண்ணி நொந்தேன். என்ன செய்வது? நகர வாழ்வு! "ஈகையோடு இரக்கம் என் சென்மத்தும் நானறிகிலேன்" என்று தாயுமானவர் பாடியது நகரத்தில் வாழ்கிறவனுக்கே பொருந்தும்.

யார் எங்கே எதுவானால் என்ன? நகர மனிதன் நாண மாட்டான்; கருத மாட்டான்; அப்படியா என்று சொல்வான்; காலத்தின் கோலம் என்று சொல்வான்; வழக்கம் போல் நாளைக் கழிப்பான்.

நானும் வழக்கம்போல் கடற்கரைக்குச் சென்று உலாவி வரத் தொடங்கினேன். ஓரிடத்தில சிறு கூட்டம் கண்டேன். அங்கிருந்து வருவோரைக் காரணம் என்ன என்று கேட்டேன்.

"யாரோ ஒரு சிறு பையன். அழகான பையன். பெற்றோர் இன்னார் என்று தெரியவில்லையாம். ஊர்பேர் தெரியவில்லையாம். கடலில் பிணம் மிதந்துவந்ததாம். எடுத்துக் கரையில் போட்டிருக்கிறார்கள். கண்டால் கண்ணீர் விடாதவர்கள் இல்லை, பாவம். அந்தச் சாவு எனக்கு வரக்கூடாதா? இந்தப் பட்டணத்தில் பொல்லாத போக்கிரிப் பயல்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள்! அவர்களுக்கு வரக் கூடாதா?" என்றார் கிழவர் ஒருவர்.

நான் விரைந்து சென்றேன். ஓடினேன். அந்தக் கூட்டத்தை அணுகுவதற்குமுன் அது கலைந்தது. போலீ சார் இருவர் ஒரு வண்டியில் அந்தப் பிணத்தை ஏற்றி ஞர்கள். நெருங்கிச் சென்றேன். முகம் மட்டும் தெரிந்தது. வண்டி ஓடிவிட்டது.

அந்த முகத்தை—மறுபடியும் காண முடியுமா என்று நான் கவலைப்பட்ட அந்த அழகு முகத்தைத்தான்—கண் டேன். ஆனல் அது காலையில் பேசியது. மாலையில் பேச வில்லை. காலையில் அறிவு அமைதி அன்பு இவற்ருேடு துன்பமும் அந்த முகத்தில் இருந்தது. மாலையில் துன்பம் ஒரு துளியும் அந்த முகத்தில் இல்லை. மற்ற மூன்றும் இருந்தன. என்ன பயன் ?

கண்ணீர் விட்டு வருந்தினேன். பிச்சைக்காரர்க்கு ஈயா நோன்பு கொண்டிருப்பதாக நான் அவனிடம் சொன்னதை நினைந்து நினைந்து வாடினேன். வீட்டிற்குச் சென்ற பிறகும் அந்த முகத்தின் அழகு—அறிவும் அமைதியும் அன்பும் கலந்த அழகு—என்னை விடாது தொடர்ந்தது ; என் மேசையின் மேலே இருந்த திருக்குறளைப் படித்து அந்த முகத்தை மறக்க முயன்றேன். ஒரு குறள் நினைவுக்கு வந்தது.

**இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து**
**கெடுக உலகியற்றி யான்.**

அந்தோ ! இரந்து வாழ எண்ணவில்லையே அந்தத் தமிழன். கூலிவேலை வேண்டும், கட்டாயம் வேண்டும் என்றுதானே கேட்டான் ?

# எவர் குற்றம் ?

வாழ்க்கையில் எத்தனையோ ஏமாற்றங்கள் வந்து வந்து போகின்றன. ஆனால் இத்தகைய கொடிய ஏமாற்றத்தை—எதிர்த்து நின்று என்னோடு போராடும் ஏமாற்றத்தை—இதுவரையில் கண்டதில்லை. மற்ற ஏமாற்றங்கள் வரும்போது பெருமூச்சு விட்டுத் தெளிவேன் ; போகும்போது பெருமூச்சு விட்டுக் கலங்குவேன ; இந்த ஏமாற்றமோ வரும்போதே என் உயிரைப் பணயமாக வைத்துக்கொண்டு வந்தது. என் உயிரைப பணயமாகப் பெற்றுக்கொண்டே செல்லும்போல் இருந்தது.

பரந்த உலகம் என்று சொல்கின்றார்கள். இருக்கலாம். உணவுத்துறையிலே பரந்த உலகம்தான். உடைவகையிலே பரந்த உலகம்தான். விருப்பான உணவை அல்லது விருப்பான உடையை வேண்டிய இடத்தில் வேண்டியபோது ஒருவன் பெறமுடியும். ஆனால் இது என்ன ? வேளைக்கு வேளை மாறும உணவா ? நாளுக்குநாள் மாறும் உடையா ? வாழ்க்கையிலே ஒருமுறை தோன்றி எந்நாளும் நிலைத்து நின்று வாழ்க்கையோடு முடிந்துபோகும் உணர்வு. இந்த உணர்வுத் துறையிலே, உலகத்தைப் பரந்த உலகம் என்று சொல்ல மனம் இல்லை. இது மிக மிகக் குறுகிய உலகம். ஒரு சிறு வீடு அல்லது ஒரு சிறு கூடு என்னலாம். இந்த உணர்வுத் துறையிலே எனக்கும ஒருத்திக்கும்தான் இடமுண்டு. அந்த ‘ ஒருத்தி ’ யார் ? இதுதான் பெருங் கலக்கத்தின் வித்து ; ஏமாற்றத்தின் காரணம் ; என் உயிரைப் பணயமாகக் கேட்ட போர்.

ஆயிரக் கணக்கான இளைஞர்களுடன் பழகிய எனக்கு ஒரு சிலரே நண்பர்களாகக் கிடைத்திருக்கின்றார்கள். இரண்டாயிரம் பேருடன் பழகினேன். அவர்களும எனனைப் பொறுக்க முயன்றார்கள். நானும் அவர்களில் பலரைப் பொறுக்க முயன்றேன். இது பரந்த உலகம் என்று தவருக எண்ணியதால் அவ்வாறு முயன்றேன். முயற்சியின் பயனாக நண்பர்கள் இருவரே கிடைத்தனர். நட்புத் துறையிலும் இது குறுகிய உலகமே என்ற உண்மை உணர்ந்தேன். ஆம் ; நட்பும் உணர்ச்சிதானே ? 'உணர்ச்சிதான் நட்பாம் கிழமை தரும்' என்ற திருவள்ளுவரைக் கேட்டிருந்தால், அவரும் இது குறுகிய உலகம்தான் என்று உடன்பட்டிருப்பார். அப்போது 'மாயிருஞாலம்' என்று இதனை வாழ்த்தி யிருக்கமாட்டார்.

இந்த இரண்டு நண்பர்களும் எனக்குத் துணைசெய்வார்கள் என்று எதிர்பார்த்தேன. உள்ளத்தையெல்லாம் ஒளிக்காமல் எடுத்துரைத்தேன். இரவெல்லாம் பேசினேன். வைகறையில் வாய்திறந்து அவர்கள் கருதியதை எடுத்துச் சொல்லிவிட்டார்கள். மருந்து இல்லாமலே என் மனப்புண்ணை ஆற்ற முயன்றார்கள். அது ஆறவில்லை.

" வாழ்க்கை என்பது ஒரு கலை. அதற்கு அனுபவம் உடையவர்களின் துணை வேண்டும். ஏட்டுக் கல்வியைக் கொண்டு அதனை எட்டமுடியாது. நாங்கள் சொல்வதைக் கேள். நீ விரும்பிய காதல் நல்லதுதான். விரும்பியபடி நீ அதைப் பெற்றும் வாழலாம். விருப்பத்தை மறந்துவிடுத்தும் வாழலாம். ஆனல் எது நல்லது என்பதை எண்ண வேண்டாமா ? உலகத்தை ஒட்டிச் செல்லாமல், சுற்றுப்புறத்தைப் புறக்கணித்து, எவரையும் பொருட்படுத்தாமல் ஒதுக்கி நீ அவளை மணந்துகொண்டு வாழ்ந்தால் அந்த வாழ்க்கை இன்பமான வாழ்க்கையாகுமா ?

காதல் வாழ்க்கை கட்டற்று விளங்குவது கற்பனை உலகத்தில்தான். நீ நினைப்பதுபோல உலகத்தை மறந்து சுற்றுப்புறத்தைப் புறக்கணித்து ஒருத்தியோடு வாழ்க்கை நடத்த முடியாது.”

இவ்வாறு நண்பர்கள் உரைத்த உபதேசம் என் மனத்தை ஓரளவு மாற்ற முயன்றது; மாற்றியது என்று சொலவதற்கில்லை. மாற்ற முயன்றது, அவ்வளவுதான்.

அந்த அழகிய முகத்தோற்றத்திற்கு நான் அடிமையாகவில்லை. அவளுடைய புன்முறுவலில் விளங்கும் கலைக்கதிருக்கு நான் அடிமையாகவில்லை. அவளுடைய இனிய பேச்சில் மிதக்கும் அறிவொளிக்கு நான் அடிமையாகவில்லை. அந்த அழகையும், நகையொளியையும், கூரிய அறிவையும் நான் மதிக்கிறேன். ஆனால் இவற்றிற்கு நான் அடிமையாகவில்லை. அழகும், சிரிப்பும், அறிவும் நான் எங்கெங்கும் காண்கின்றேன். நான் அவற்றைத் தேடித் திரியும் இளைஞனாயிருந்தால் இன்று இவ்வளவு கவலைப்பட வேண்டியதில்லையே! அழகையும் சிரிப்பையும் அறிவையும் கடந்து அவள உள்ளத்தில் வாழும் உணர்வு, நான் எங்கும் காணாத உணர்வு; இதனை நினைக்கும்போது இந்த உலகத்தில் நானும் அவளும் தவிர வேறொன்றும இல்லை என்று தோன்றுகின்றது. இதை அந்த நண்பர்கள் அறிந்தே இருக்கின்றார்கள். அறிந்தும் என்னைத் திருத்த வேண்டும் என்று எண்ணி எனனவோ சொல்கின்றார்கள்.

இந்த உலகில் நான் வாழ வேண்டும. வாழ்வதற்கு உணர்வு வேண்டும். என் உணர்வுக்கு ஒரு துணை வேண்டும் அதற்குத்தான் அவளை நாடினேன். உணர்வுலகத்தில் பழகிய நண்பர்களும் அதைத் தடுக்கிறார்கள். உணர்வைவிட உலகம் பெரியது என்கிறார்கள். நான் உலகம் சிறியது என்கிறேன்.

எங்களுக்குத் தனித்தனி மனங்கள் இருப்பதாகத் தெரியவில்லை. அவள் உள்ளத்தில் உணர்வது போலவே நான் உணர்கின்றேன். நான் உணர்வது போலவே அவளும் உணர்கின்றாள். எங்கள் வாழ்வு ஒரு மனத்தின் வாழ்வாக இருக்கிறது. அத்தகைய வாழ்விற்கு இடம் இல்லையா ? இரண்டு வேறுபட்ட மனங்கள் இடையறாமல் போர் செய்து கொண்டு வாழும் வாழ்க்கையே வேண்டும் என்பது படைத்தவன் நோக்கமா ?

* * *

" அவளை மறந்து வாழ்வதானால் — " : இப்படி மூன்று மாதங்களுக்குமுன் நான் எண்ணியிருந்தால், அந்த எண்ணமே எமனாய் மாண்டிருப்பேன். எண்ணிய எண்ணம் அடுத்த நொடியிலே என்னை மாய்த்திருக்கும். மூன்று மாதங்களுக்குப் பிறகு இன்று இந்த எண்ணத்தை எண்ணவும் முடிகின்றது. ஏமாற்றம் விளையுமே என்று நடுங்கவும் முடிகின்றது. அவளை மறந்துவிட்டு இன்னொருத்தியை மணந்துகொள் என்று நண்பர்கள் சொல்லும் சொல்லைக் கேட்கவும் முடிகின்றது.

இன்னொருத்தியும்— அவளும் அழகிதான், கலை வல்லவள்தான். அறிவு நிரம்பியவள்தான். ஆனால் என் மனம் நடுங்குகிறது. அவளுடைய உள்ளம் எப்படிப் பட்டதோ ? அறிவார் யார் ? அறிவது எப்படி ? அறியாமல் துணிவது எவ்வாறு ? கபடற்ற பார்வை, அடக்கமான நடை, ஒழுக்கமான வாழ்வு—இந்தச் சிறந்த பண்புகள் காண்கின்றேன். ஆயினும்—.

* * *

நான் எங்கோ நடந்து போய்க்கொண்டிருந்தேன். அது அழகான பாதையாக இருந்தது. என் கையில் திருக்

குறளோ வேறு எதுவோ இருந்தது. அதை ஊர்ப்பயணம் என்று சொல்வதற்கில்லை. ஆனால் என் நடையிலே ஒரு வகை ஊக்கம் இருந்தது. ஊக்கத்திற்குக் காரணமாக என்னை அடுத்தாற்போல் க— நடந்து வந்துகொண்டிருந் தாள். என் பக்கத்தில் என்னோடு கைகோத்து நடந்துவர வேண்டும் என்று விரும்பினேன். அவள் அதற்கு இணங்க வில்லை. என் பின்னே மெல்ல நடந்து வந்தாள். நான் முன்னே சென்றேன். அந்தப் பாதையில் நடப்பதில் ஓர் இடையூறும் இல்லை என்பது என் எண்ணம். ஆனால் என்ன காரணத்தாலோ அவள் பின் வாங்கினாள். எனக்கு முன்னும் செல்லாமல், என் பக்கத்திலும் வராமல், பின்னே நடந்து வந்தாள். அதுவே போதும் என்று மகிழ்ந்து நான் ஊக்கத் துடன் நடந்தேன். திரும்பித் திரும்பி அவளைப் பார்த்துக் கொண்டே சென்றேன். நெடுந்தூரம் நடந்தேன். நின்றேன். திரும்பி நோக்கியபோது அவள் நெடுந்தொலைவில் காணப் பட்டாள். அப்போது என் பின்னே சிறிது தொலைவில் அடக்கத்தோடு அச்சத்தோடு இன்னொருத்தி நடந்து வரு வதைக் கண்டேன். அவள்தான் த—.

இந்தக் கனவு எவ்வளவு பொருளுடைய கனவு என் பதை நான் அன்று உணரவில்லை. கனவு கண்டு மூன்று ஆண்டுகள் ஆகின்றன. கனவு கண்ட அன்று விடியற் காலையில் என் நெஞ்சம் பட்ட பாடு சொல்ல முடியாது. அந்தக் கனவை இன்று நினைத்துப் பார்க்கின்றேன். அமைதியோடு நினைக்கின்றேன். அவள் எனக்கு முன்னே சென்றிருப்பாளானால், என்னை ஒருவரும் தடுத்திருக்க முடி யாது. அவள் எவ்வளவு வேகமாகச் சென்றிருந்தாலும் நான் அவளை விடாமல் தொடர்ந்திருப்பேன். என்னை ஒருவரும் இழுத்துப் பிடித்திருக்க முடியாது. அல்லது, அவள் என்னுடன் கைகோத்துப் பக்கத்தே நடந்து வந்திருந்

தாலும் நாங்கள் பிரிந்திருக்க மாட்டோம். நண்பர்களின் உபதேசம் எங்களுக்குத் தடையாக இருந்திருக்க முடியாது. ஆனால், நல்ல பாதை என்று அறிந்தும், இல்லாத இடை யூறுகளை நினைந்துகொண்டு அஞ்சி, பின்வாங்கி, என்னை முன்னே நடக்கவிட்டுத் தான் பின்னே வந்துகொண்டிருந் தாள். நான் திரும்பிப் பார்த்தபோது என் கண்ணுக்கு எட்டாத் தொலைவில், என் வாழ்க்கைக்கு எட்டா நிலையில், தனித்து நின்றுவிட்டாள். இது என் குற்றமா ?

* * *

இன்று—இந்த மூன்று ஆண்டுகள் கழிந்த பிறகு—இந்தக் கனவை அமைதியாக எண்ணும் வாய்ப்புக் கிடைத்த போது, என் வாழ்க்கைத்துணைவியாக விளங்குகின்றாள் த—. இந்தக் கூட்டில் நான் எதிர்பார்த்த கிளி என்னோடு இல்லை. அது கூட்டினுள் புகுவதற்கு அஞ்சி இன்னும் பறந்து திரிந்துகொண் டிருக்கிறது. இந்த அமைதியான கிளி த— என்னுடன் மகிழ்ச்சியாக இருக்கின்றது. அன்று அவள் இல்லாத குறையால் என் நெஞ்சமே வெடித்து விடும்போல் தோன்றியது ; என் உயிர் வாழ்வு முறிந்து போகும்போல் இருந்தது. ஆனால் இன்று இவளோடு நானும் வளமாகத்தான் வாழ்கின்றேன், என் நெஞ்சமும் அமைதி யாகத்தான் இருக்கின்றது.

சென்னை அரசாங்கத்தின் பரிசு பெற்றவை :

**கள்ளோ ? காவியமோ ?** (புனைகதை)
**அரசியல் அலைகள்** (கட்டுரைகள்)

தமிழ்வளர்ச்சிக் கழகத்தின் பாராட்டுப் பெற்றவை :

**திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்** (ஆராய்ச்சி)
**விடுதலையா ?** (சிறுகதைகள்)
**மொழிநூல்** (ஆராய்ச்சி)